ஓம் பரப்பிரம்மணே நம: 64-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும்,
ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும்
நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) 

| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸஹு ஐப்பசிமீ 1உ | இதழ்-78. |
| Vol. 7. | 1932-ம்ஹு அக்டோபர்மீ 16உ | No 78. |




"ஈசுவரப் ப்ரீதி"யை யடைந்தவனே உண்மையான பக்தன் ; அவனே ஸத்யவான். தன்னயத்தைப் பாராட்டாமலும், எதிராளின் உபகாரத்தைக் கோராமலும், உலக வியாபாரங்களில் விழுந்துருளாமலும் இருப்பவனே தன்யன். திரிகரணங்களாலும் ஈசுவரனை ஸ்மரிப்பவனே ஆநந்தன். வயிற்றை நிறைத்துக்கொள்ளவேண்டிப் பாசாங்கு வேஷம் போடுவோர் உலகினரை ஏமாற்றலாமேயன்றி பகவானை ஏமாற்றமுடியாது. பல பெயர்களின் மத்தியில் நின்று கடவுளைப் பாடித் துதித்தாலும், உள்ளன்பினால் செய்தாலன்றி பலன் கிடைக்காது. கடவுளைக் கண்டதுபோலும், அவருடன் பேசுவதுபோலும் சிலர் அபிநயிப்பார். ஞானமொன்றினால் தான் பகவானைக் காணலாம். பக்தியால்தான் அவரை யடைந்து ஆநந்திக்கலாம். வேறுவிதத்தில் அவரைத் தரிசிப்பது ஸாத்தியமல்ல. ஆகாரக்ஷாமம் ஒருபுறம் இருக்கட்டும்; இன்னொருவித க்ஷாமமும் உண்டு ; அது ஞானோதயமில்லாத பஞ்சமேயாகும்.

ஃ

"நிலையில்லாக்காயம், நிச்சயமற்ற வாழ்வு" உலகத்தில் சரீரத்துடன் பிறக்கிறோம். மரணகாலத்தில் சரீரத்தைப் பூமியிலேயே விட்டுச்செல்லுகிறோம். சரீரமுண்டானதும், அழிந்ததும் பூமியிலேயேயென்று நன்றாய் அறிந்திருந்தும் மனோவிகாரத்தால் அடிக்கடி பிரமை யுண்டாகிறது. ஒருவன் செத்தால் அவன் பங்குக்கு உலகம் பொய்யாகிறது. மனிதன் பிறந்தால்

என் வீடு, என் பூமி யென்று பாத்தியம் கொண்டாடுகிறான். ஞானம் அடைந்தவனும் மனிதனே ; அஞ்ஞானத்திலிருந்து துக்கிப்பவனும் அவனே.

ஃ

"எவ்வுயிரையும் காக்க ஒரு ஈசனுண்டோ இல்லையோ, அவ்வுயிரில் நானேறுநவனல்லவோ ?" என்று ஒருவர் பாடினார். நம்மைக் காப்பதற்குக் கடவுள் இருக்கிறார் என்னும் நிச்சயத்தை நாம் கொண்டால் நமக்கு ஒரு நாளும் குறைவுண்டாகாது. சில பந்துக்கள் தங்களுடைய உதவியின்றி எந்தக்காரியமும் மற்றவர்களுக்கு நடவாதென்று நினைப்பர். இந்தப் பந்துக்களுடைய உதவியில்லாமலே பகவத் கிருபையாலேயே தன் காரியங்களை நடத்திக்கொண்டு போய்விடவேண்டுமென்று ஸங்கல்பித்துக் கொள்பவனுக்கு அதற்குத் தகுந்தபடியே பகவானும், அவனது உறவினர்களை வேறுவேறு காரியார்த்தமாகத் தூரமான இடங்கட்குப் போகும்படி செய்துவிட்டு, அவர்கள் இல்லாதகாலத்தில் தனது பக்தனுக்கு வேண்டிய யாவற்றையும் நிறைவேற்றி வைத்துவிடுகிறார். வெகு நாட்கட்குப் பின்பு அவனது பந்துக்கள் திரும்பி வந்து, தாங்கள் இல்லாமலே எல்லாக் காரியங்களும் முடிந்துவிட்டிருப்பதை யறிந்து மனதிற்குள் பொறாமையோடும் மௌனமாய் இருந்துவிடுகின்றனர். யாருக்குப் பகவானிடத்தில் உண்மையான பக்தியும் நம்பிக்கையும் இருக்கிறதோ அவர் சுகத்தையடைவர். தீராச் சந்தேகமுள்ளவர்கட்கும், ஒழுக்கங் கெட்டவர்களுக்கும் எந்நாளும் துக்கமே ஆஸ்தியாகும்.

ஃ

"இரந்துண்பவர் இருவர்" ஒருவரையொருவர் சந்தித்தபோது தமது பிழைப்பைப்பற்றிப் பின்வருமாறு பேசிக்கொண்டார்கள்.

"இதுவும் ஒரு பிழைப்பா? மிகவும் வெட்கங்கெட்ட ஜீவனமாயிருக்கிறது ; நான் முழுதும் இரந்தாலும் அரைவயிற்றுக்குக்கூடக் கிடைக்கவில்லையே! அதனால் எனக்கு மிகவும் அலுப்பும் வெறுப்பும் உண்டாகிறது. என் வேலையில் உற்சாகமேயில்லை" என்றான் அவர்களுள் ஒருவன்.

"அப்படியா? எனக்கு அப்படி உற்சாகமற்றுத் தோற்றவில்லையே! அது எனக்கு மிகவும் சிறந்த வியாபாரமாகத் தோற்றுகிறது. மனஸ்பூர்வமாகவே எனக்குக் கிடைத்த வேலையைச் செய்து முடித்துவிடுகிறேன். நாளுக்கு நாள் எனக்கு அதில் அதிக ஸந்தோஷம் உண்டாகின்றதே" என்றான் மற்றொருவன்.

"இதென்ன ஆச்சரியம்! எனக்கு மாத்திரம் அநேக இடையூறுகள் இருக்கின்றனவே! முதலாவது ஒரே மனிதனண்டைக்குப் பலதரம் போவதென்றால் அதைவிட வெட்கக்கேடு வேறென்ன வேண்டும்? அடிக்கடி ஒரே இடத்துக்கு இரக்கப்போனால் அவர்கள் நம்மை என்னென்று எண்ணுவார்கள்?"

"என்னுடைய வழக்கத்தில் எனக்கு அப்படியில்லை! ஒரே இடத்துக்கு நான் அதிகமாய்ப் போகப்போக எனக்கு முன்னிலும் அதிகமாய்க் கௌரவமே உண்டாகின்றது."

"அதென்ன நீ அப்படிச் சொல்லுகிறாய்? ஒருதரம் போன இடத்துக்கு நான் மற்றொருதரம் போனால், 'அடா சோம்பேறிப் பையலே! உனக்கு வேறு வேலையில்லையா? இனிமேல் இங்கு வருவாயானால் உன்னைத் தடியெடுத்தடிப்போம்' என்று சொல்லித் துரத்திவிடுகிறார்களே. நான் என் குறைகளை என்ன சொல்லியும் கேட்பதில்லை. எவ்வளவு வருந்தி வேண்டினாலும் கொஞ்சங்கூடப் பிச்சையிடுவதில்லை."

"எனக்கு அப்படியில்லை; போனவிடத்தில் நான் விரும்பிய பொருள் கிடைக்காவிட்டாலும், அதிலும் சிறந்ததாய் மற்றொரு பொருள் கிடைக்கின்றது."

"அப்படியாயின் உன்னைப்போல் அதிர்ஷ்டசாலி எவருமில்லையப்பா நான் எங்கே யாசிக்கப் போனாலும், 'நாங்களே சோறில்லாமல் அல்லாடுகிறோமே; உனக்குக் கொடுக்க இங்கென்ன இருக்கிறது? ஓடிப்போ' என்று சொல்லித் துரத்திவிடுகிறார்களே."

"என்னை ஒருபோதும் எவரும் அப்படித் துரத்தினதில்லை. எல்லாச் செல்வமும் நிறைந்திருக்கும் இடத்திலேதான் நான் போய் யாசிப்பது. அங்கு ஒருபோதும் எனக்கு அவமதி கிடைப்பதில்லை."

"கொஞ்சம் மனவிசாரத்தோடும் நான் இரக்கப்போனால், இந்தப் பாசாங்கு யாரிடத்தில் செய்கிறாய் என்று சொல்லி யாவரும் என்னை இகழ்கிறார்கள்; கொஞ்சம் களிப்புடன் இரக்கப்போனால், இவ்வளவு களிப்புற்ற உனக்கு வந்த கேடென்ன? உழைத்து ஒரு வேலை செய்து பிழைக்கிறது தானே; ஏன் வெட்கங்கெட்டு வீடுவீடாய் ஓடி இரக்கிறாய்? ஓடிப்போ என்கிறார்கள்! இதற்கு நான் என்ன செய்வேன்?"

"எனக்கு இப்படி ஒருபோதும் விசாரப்படவேண்டுவதில்லை. சங்கடப்படும்போது இரக்கத்துடன் ஆதரிக்கப்படுகிறேன். சந்தோஷப்படும் போது பின்னும் அதிகமாய்க் கொண்டாடப்படுகிறேன்."

"இதென்ன ஆச்சரியம் அப்பா! எனக்கு ஒருபோதும் அப்படி நேரிடுகிறதில்லை. என்னுடைய சங்கடங்களைப் பாதி சொல்வதற்கு முன்னமே அவர்கள் போதும் போதும் என்று அலுத்துக் காதை மூடிக்கொண்டு கேட்க மாட்டோம் என்கிறார்கள். அல்லது பாதியில் கேட்டு எழுந்து போய்விடுகிறார்கள். என் கஷ்டங்களை உள்ளபடி நான் என்ன சொன்னாலும் அவர்கள் அதெல்லாம் பொய்க்கதை என்று சொல்லிச் சிறிதும் நம்பமாட்டோம் என்கிறார்கள்."

"அப்படியா? ஐயோ! இதற்கும் என் நடத்தைக்கும் எவ்வளவோ பேதமிருக்கிறதே! என்னுடைய துக்கங்களையும் குறைகளையும் நான் அடிக்கடி சொல்லிக்கொள்ள வேண்டுவதில்லை. ஒவ்வொருவரும் தாமே என்னை

---

பழய மனிதர்களெல்லாம் காலஞ்சென்றுவிட்டதால், ஒரு விவாகத்திற்குச் செல்லும்போது அங்கு காணுவோரின் முகங்களெல்லாம் புதிய உருவங்களாகவே யுள்ளன. நம்மைத் தெரிந்து அழைப்போர் ஒருவர் இருவரே.

வேண்டியவழைக்கிறார்கள். இது மாத்திரமேயன்று ; நான் எந்த வீட்டிலே போய் யாசிக்கிறேனோ அங்கிருப்பவர்க்கு என் குறைகள் எனக்குத் தெரிந்திருப்பதைப் பார்க்கிலும் அதிக நன்றாகத் தெரியும். அதனால் என்னிடத்தில் அவர்க்கு அபிமானம் அதிகம்."

"நீர் சொல்வது எனக்கு வெகு அதிசயமாயிருக்கிறதே! நீர் எந்த வீட்டிலே போய் இரக்கிறீர் ஐயா?"

"நான் யாசிப்பதையா கேட்கிறீர்? கடவுளுடைய வீட்டிலே போய் யாசிக்கிறேன் ; அவரே என் குறைகளை யறிந்தவர். நீர் யாசிப்பது எங்கே?

"நானா! இவ்வுலகத்திலேயேதான் இரந்துகொண்டிருக்கிறேன்."

"அப்படியாயின், உன் வியாபாரத்தில் நீ அலுப்படைவது ஒரு அதிசயமன்று. நீயும் நான் இரக்குமிடத்திலேயே இரக்கப் பிரயத்தனப்படு. அதையே நீ உறுதியாகக் கொள்வாயானால், ஒருபோதும் உனக்கு ஒரு குறையும் உண்டாகாது. ஒருவரும் கோபித்து உன்னைக் கடுமையாய்ப் பேசமாட்டார்கள் ; என்றும் எவ்விடத்திலும் நீ வெறுங்கையோடு திரும்பமாட்டாய்" என்றான்.

இப்படி அந்த நற்றோழன் சொன்ன நற்புத்தியைக் கேட்டு, எங்கும் இரந்து அல்லாடின பேதைப் பிச்சைக்காரன் புத்தி தெளிந்து, அன்றுமுதல் மனிதர்களிடம் யாசிப்பதை விட்டுவிட்டு, ஒரு கைத்தொழிலால் பிழைக்க வழி தெரிந்துகொண்டு, அதில் நன்றாக உழைத்துவிட்டுத் தன்னுடைய சகல குறைகளையும் கடவுளிடமே தெரிவித்து, அவர் ஒருவரிடத்தில் மட்டுமே யாசிப்பதென்ற சிரேஷ்டதரமான உறுதியைக் கொண்டவனாய் மனக்கவலை நீங்கி தெய்வபக்தியுடன் மேன்மைபெற்று வாழ்ந்தான்.

---

நீதிலதா.

1. ஒரு காரியத்தைப்பற்றி நீ அதிகம் தெரிந்திருப்பினும், பிறர் பேசும்போது தடுத்துப் பேசாதே.

2. உன் ஆப்த நண்பர்களாயினும் அவர்களின் சம்மதியின்றி அவர்களுடைய சங்கதிகளைத் தெரிந்துகொள்ளப் பிரயாசைப்படாதே.

3. உலகத்தில் உன்னைவிட எல்லோரும் சந்தோஷமாயிருக்கிறார்களென்று நினையாதே. எல்லோருக்கும் ஏதாவதொரு கவலை இருந்துகொண்டுதானிருக்கிறது.

4. உன்னுடைய நோய்களையும் கஷ்டங்களையும் ஒரு புன்சிரிப்பினால் மறைத்துவை. ஏனெனில் இவ்வுலகில் உனக்காகக் கவலைப்படுவோர் ஒரு சிலரே.

5. பல பேருக்கும் விருப்பமானாலும் ஒரு தகாத காரியத்தைச் செய்யாதே.

6. உலகத்தில் எல்லோரும் அயோக்கியர்களென்று நினையாதே. ஏனெனில், அது நீயே முதலில் அயோக்கியன் என்பதைக் காட்டுகிறது.

கோமளவல்லி அம்மாள், சென்னை.




# நமது வைத்தியம் போன போக்கு.



யுள் வேதமாகிய வைத்தியம் இந்துக்களுடைய உபவேதங்கள் நான்கிலொன்ருக எடுத்துச் சொல்லப்படுகிறது. ஈச்வரனே தன்வந்திரியாக அவதரித்து வைத்திய சாஸ்திரத்துக்கு முதனூல் செய்ததாகச் சொல்லுவார்கள். இதை அனுசரித்துச் சாகர், மாதவர், சுசுருதர் முதலிய ரிஷிகளும் பெரிய வைத்திய நூல்களைச் செய்திருக்கிருர்கள். சமஸ்கிருதத்தில் மிகவும் பிரசித்தமானது வாகடம் என்னும் நூலாம். தமிழிலும் அகஸ்தியர், தேரையர் முதலானவர்கள் செய்ததாகச் சொல்லப்படுகிற அநேக வைத்திய நூல்களுண்டு.

ஃ

பல நூற்ருண்டுகளுக்குமுன் மற்ற ஜாதியார்கள் நாகரீகமற்ற காட்டு மிருகங்கள்போலத் திரிந்துகொண்டிருந்தபோதும், இந்துக்கள் வைத்திய சாஸ்திரத்திலும் அப்படியே இன்னும் பல சாஸ்திரங்களிலும் மிகுந்த தேர்ச்சி யடைந்திருந்தார்களென்பது அவர்கள் எழுதிவைத்திருக்கிற நூல்களால் விளங்கும். ஆனல், இந்துக்களின் புராதனங்களில் பெரும்பாலும் நம்பிக்கையில்லாதவர்கள் தற்காலத்தில் வெகு பெயருண்டு. இவர்கள் இந்துக்களுக்குள் உண்மையான வைத்திய சாஸ்திரமும், அதை நன்ருகக் கற்றுணர்ந்தவர்களும் எப்போதாவது இருந்ததாக ஒப்புக்கொள்ளவேமாட்டார்கள். சுதேசியான ஒரு இங்கிலீஷ் டாக்டரிடம் ஒரு சுதேச வைத்தியர் ரணசிகிச்சைக்குச் சென்ருல், "இந்த மனுஷ்யனும் ஒரு வைத்தியனு?" என்று அவர் தமது "டாக்டர் கம்பீரத்தில்" இகழ்ந்து பரிகசிக்கவும் கூடும்.

ஃ

இந்த இடத்தில் நாம் கவனிக்கத்தக்க சில விஷயங்களுண்டு. காலதேச வர்த்தமானங்களுக் கியைந்தபடி சில சாஸ்திரங்கள் முன்னுக்கு வருகின்றன. வேறு சில சாஸ்திரங்கள் மங்கிப்போகின்றன.

நாளுக்குநாள் மனிதர்களுடைய அறிவு முதிர்ந்துகொண்டு வருகிறது. அவர்கள் மேன்மேலும் நாகரீகமடைந்து வருகிறார்களென்பது தற்காலத்தில் படித்தவர்கள் எல்லாருடைய கொள்கையுமாம். பூமியிலுள்ள ஜாதியார்களெல்லோரையும்பற்றி மொத்தமாய் யோசித்துப்பார்த்தால் இது சரியான கொள்கைதான். ஆனால், தனித்தனியாய் ஒவ்வொரு ஜாதியாருடைய முன்பின் சரித்திரங்களை ஒப்பிட்டுப்பார்த்தால் அவர்கள் எல்லா விஷயங்களிலும் நாளுக்குநாள் விர்த்தியடைந்து வந்திருக்கிறார்களென்று காணப்படவில்லை. இந்துக்களுடைய சங்கதியும் தாழ்ந்த நிலையில்தான் இருக்கிறது. இத்தேசத்தில் பூர்வீகர்கள் கற்றறிந்த சாஸ்திரங்களின் பெயர்களும் இப்போதுள்ளவர்களுக்கு அவ்வளவாகத் தெரியாது.

ஃ

மனிதர்களுடைய ஸ்தூல சரீரங்கள் தோல், எலும்பு, நரம்பு, மாம்சம் முதலானவைகளால் வேயப்பட்டுக் கைகால் முதலிய அநேக உறுப்புகளுள்ளவைகளாயிருக்கின்றன. இவைகள் தத்தமக்குரிய தொழில்களைச் செய்வதினால் சரீரமானது நிலைபெற்றுச் சௌக்கியத்தையடையும். உதாரணமாக:—நாம் உட்கொள்ளும் ஆகாரமானது உமிழ்நீருடன் சம்பந்தப்பட்டு இரைக்குடலில் சேர்ந்து இரத்தத்தினின்றும் உண்டாகிற ஒருவிதமான நீரினால் தகிக்கப்பட்டு, பின்பு பலபல விதமாக மாறிக் கடைசியாய்ச் சாரமான பாகமாக மாறும். இவ்விதம் உண்டாகின்ற செவ்விரத்தமானது தேகத்தின் இடது பக்கத்திலுள்ள இரத்தாசயத்தினின்று புறப்பட்டு நரம்புகள் நாடிகள் வழியாய்த் தேகமுழுவதும் வியாபித்துத் தன்னிடத்திலுள்ள சாரமான அணுக்களால் தேகத்தின் ஒவ்வொரு பாகத்தையும் போஷித்து, ஏற்கெனவே உபயோகத்தினால் கெட்டுப்போயிருக்கும் அணுக்களைச் சேர்த்துக்கொண்டு கருநிறத்துடன் வலது பக்கம் மார்புக்குத் திரும்பிவரும். இப்படியாகக் கெட்டுப்போன ரத்தமானது நாம் சுவாசித்து உட்கொள்ளும் (Oxigen) பிராணவாயுவினால் சுத்தம் பண்ணப்பட்டு மறுபடியும் செவ்விரத்தமாகமாறி முன்போல் தேகமுழுதும் வியாபிக்கும். சரீரம் சௌக்கிய ஸ்திதியிலிருக்கும் பொருட்டு இரத்தம் இடைவிடாமல் ஓடிக்கொண்டிருக்க வேண்டியதுந்தவிர, நம்முடைய உணவும், மன—மொழி—மெய்களாலாகுஞ் செயல்களும் மிதமாகவேயிருக்கவேண்டும். சுபாவத்தில் சௌக்கியமாயிருக்கிற சரீரத்திற்கு

---

வீட்டுக்குப் பசியுடன் வந்தவனுக்கு அன்னமிடாது திருப்பியனுப்பினும், அவமானப்படுத்தினும், அவன் மற்றொருமுறை அவ்வீட்டுக்கு வருவதற்குள் அங்குள்ள முக்கியஸ்தரொருவர் கண்மூடிக்கொண்டு கடவுளிடம் போய்விடுகிறாராம்.

நோயுண்டாவதற்கு முக்கிய காரணம் உணவும் செயல்களும் மிகுவதும் குறைவதுந்தான்.

ஃ

இந்துக்களின் சாஸ்திரத்திற்கும், பிரெஞ்சு—இங்கிலீஷ்—லாத்தின்—பாஷையிலுள்ள அங்க சாஸ்திரத்திற்கும் மிகுந்த பேதங்களுண்டு. ஐரோப்பியர்கள் பெரும்பான்மை மிருக பட்சிகளுடைய சரீரங்களையும், சிறுபான்மை இறந்துபோன மனிதர்களுடைய சரீரங்களையும் அறுத்துப் பார்த்தும், கட்புலனால் அறியப்படாதவைகளைப் பூதக்கண்ணாடியினாலும், யுக்தியாலும் நுட்பமாக ஆராய்ந்தும், தேகத்திலுள்ள யாவற்றையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். இப்படியாகப் பல தடவைகளில் ஆராய்ச்சி செய்து மேற்சொன்ன சாஸ்திரங்களை உண்டு பண்ணியிருக்கிறார்கள். ஜீவவதை செய்தால் பாவம், பிணத்தைத் தொட்டால் தோஷம்—என்கிற கோட்பாடுள்ள நம்மவர்கள் சரீர சாஸ்திரத்தை என்ன விதமாய் அறிந்தார்கள்? தேகத்தில் தொண்ணூற்றாறு தத்துவங்களும், ஆறாதாரங்களு முண்டென்றும், இளை—பிங்களை—ஸுஷும்னை—என்கிற முக்கியமான மூன்று நாடிகளுக்குள் ஸுஷும்னா நாடி பூமி மத்தியில் மேருபர்வத மிருப்பதுபோல் தேக மத்தியிலுள்ளதென்றும் சொல்வார்கள். இவைகளெல்லாம் உண்மையாய் உண்டோ இல்லையோ என்பதை இங்கே விசாரிக்கவேண்டிய அவசியமில்லை. இவைகள் எப்படி அறியப்பட்டனவென்று இந்து பண்டிதர்களைக் கேட்டால், அவர்கள் சர்வஞ்ஞரான கடவுளிடத்திலிருந்து சகல சாஸ்திரங்களும் உண்டாயிற்றென்னும் ஐதீகத்தை எடுத்துச் சொல்லுவார்கள். ஸித்தர்கள், யோகிகள் தங்கள் தேகத்தில் நிகழ்வதை யோக நித்திரையி லறிவார்கள். அப்படி அவர்கள் அறிந்ததை சாஸ்திர மூலமாய் மனிதருக்கு வெளியிட்டிருக்கிறார்களென்பது அநேகருடைய அபிப்பிராயம்.

ஃ

ஔஷதங்களுக்குரிய எண்ணிறந்த பதார்த்தங்களின் குணங்கள் அஷ்டாங்க இருதயம், ஜீவரட்சாமிருதம், சிந்தாமணி முதலிய வைத்திய நூல்களில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கிறதென்று இந்து வைத்திய பண்டிதர்கள் சொல்வர். ஐரோப்பியருடைய ரஸாயன சாஸ்திரத்தோடு ஒருவாறு ஒற்றுமையுள்ள இந்துக்களுடைய நூல் விஷப்பிரதிவிஷம் என்னப்பட்டது. இதில் இன்ன

---

விவாக காலத்தில் எவருடைய மனஸ்தாபமேனும், ஸஞ்சலமேனும் நேரினும், எந்தப் பிரதானஸ்தரையாவது அவமானப்படுத்தினும் அந்த விவாக தம்பதிகள் நெடுங்காலம் சேர்ந்து வாழ்வதற்கின்றி காலகதியாகுமாறு ஸம்பவிக்கிறதாம்; மறு விவாகம் நடக்கும்படியாகிவிடுகிறதாம்.

இன்ன வஸ்துக்கள் சேர்க்கையினால் இவ்விதமாக மாறுமென்பதைச் சொல்லுகின்றது. ஆனால், (Oxigen) பிராணவாயு, (Carbonic acid) அமிலவாயு, (Nitrogen) உப்புவாயு முதலிய வாயு ரூபமான தாது மூலங்களின் விவரமும் இவைகளடங்கி யிருக்கும் வஸ்துக்களினின்று இவைகளைப் பிரிக்கும் விதமும், அதற்காக உபயோகிக்கப்படும் கருவிகளின் குறிப்பும் நம்முடைய சாஸ்திரங்களில் சொல்லுகிறதாகக் காணப்படவில்லை. இந்துக்களுடைய சிந்தாந்தப்படி சகல வஸ்துக்களும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும் பலபல அம்சங்களில் சேருவதினால் உண்டாகும். ஆனால், நாம் காணுகிற நிலம் நீர் முதலானவை பரிசுத்தமான பூதங்களல்ல இவைகள் ஒவ்வொன்றிலும் மற்ற நான்கும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்று சொல்வார்கள். இந்துக்களின் சாஸ்திரப்படி ஒன்றுடனும் சம்பந்தப்படாத பரிசுத்த ஆகாசத்துக்குக் கனதியும் நிறையும் இல்லை.

ஃ

இந்து பண்டிதர்கள் பொன், வெள்ளி முதலிய உலோகங்களின் சத்து இன்ன, இன்ன மூலிகைகளிலிருக்கிறதென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். பஞ்ச லோஹங்களையும் சில மூலிகைகளுடன் சேர்த்துப் புடம் போடுவதனாலுண்டாகும் பஸ்பங்களை ஒளஷதங்களாய் உபயோகப்படுத்துகிறதுண்டு. பாதரஸத்தினாலாகும் காரியங்களைப்பற்றி இந்துக்களுக்குத் தெரிந்தமட்டும் வேறொரு ஜாதியாருக்கும் தெரியாது. கந்தகம் பாஷாணம் முதலான வஸ்துக்களின் துர்க்குணங்களைப் போக்கவும், அவைகள் விசேஷ நன்மையை மாத்திரம் தரும்படி செய்யவும் இந்து பண்டிதர்களுக்குச் சக்தியுண்டு.

ஃ

தன்வந்திரியின் குணபாடம் முதலிய நூல்களில் எண்ணிறந்த மூலிகைகளின் குணங்கள் விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகின்றனவாம். இந்த விஷயத்தில் இத்தேசத்தாருக்குள்ள ஞானம் அபாரம். ஆகிலும், விசேஷ நன்மை பயக்குகிற மூலிகைகளையும் ஒளஷதங்களையும் பெரியோர்கள் வெளியிடுகிறதில்லை. அவரவர்கள் கண்டவற்றை அவரவர்கள் ரகசியமாக வைத்திருந்து தம்மை யடுத்துவந்தவர்களுக்கு மாத்திரம் உபதேசிப்பார்கள். "நீ சாகும்போது இதை ஒருவனுக்குத்தான் சொல்லலாம்; பலரறிய வெளியிட்டால் இன்ன தேவதை சாபத்தினால் உன் குலம் நாசம் அடையும்; மூலி

---

நல்ல மனமில்லாதாரின் கண்ணுக்குத் தன்னைச் சேர்ந்தவன் அழகாய்க் கட்டுகிற வீட்டைக் குளிர்ந்த கண்களுடன் பார்க்கமுடியாமல், கட்டுகிறஇடத்தைக்கூட எட்டிப்பாராமற் போய்விடப் பண்ணுமாம்.

கையும் பலியாமற்போகும்" என்று சொல்லித் தெரிந்துகொள்ளு கிறவனையும் பயமுறுத்துவார்கள். இவ்விதம் வெளியிடாமலே மறைந்துபோன மூலிகைகளுக்குக் கணக்கில்லை. இந்துக்களுடைய வைத்திய கிரந்தங்கள் எல்லோருக்கும் தெரியத்தக்க சுலபமான வாசகநடையிலில்லை. எல்லாம் காதுக்கின்பமான சுலோகங்களாக வும், எதுகை மோனையமைந்த முடுக்கான தமிழ் பாட்டுகளாகவும், இருக்கும் இது அக்காலத்து வழக்கம். இக்காலத்திலுங்கூடப் பத்து தமிழ்ப்பண்டிதர்கள் ஒன்றுகூடித் தங்களுடைய உயரிய இலக் கண நடையிற்பேச ஆரம்பித்துவிட்டால் அருகிலிருப்பவர்கட்குப் பெரும்பாலும் விளங்காது. இவ்விதமே, பாடல்களாக அமைந் துள்ள வைத்தியநூல்களின் கருத்துகளும் செவ்வையாய்ப் புலப்பட வில்லை ஆயினும் தங்களுக்கு நன்கு புலப்பட்டுவிட்டதாகக் கூறு வோரும் உண்டு.

ஃ

இந்து வைத்தியசாஸ்திரப்படிக்கு வாத பித்த சிலேஷ்மம் என்ற மூன்றும் தத்தம் அளவிற்குக் குறைந்தும் மிகுந்துமிருப் பதுதான் சகல வியாதிகளுக்கும் காரணமாகும். நமது வைத்தியர் கள் நாடி, நேத்திரம், நாக்கு, குரல், மூத்திரம் முதலிய குறிகளால் வியாதியை நிதானிக்கிறதுண்டு. இவைகளெல்லாவற்றிலும் இந்து வைத்தியர்களுக்கு முக்கியமானது நாடி. தாதுவின் நடை, இன்ன பட்சி—இன்ன மிருகத்தினுடைய நடையைப் போலிருக்குமானல் பழம்பாட்டுகளில் சொல்லுகிறபடி பித்தமதிகம், வாதமதிகம், அல் லது இரண்டும் தொந்தித்திருக்கிறது என்று இப்படிப் பலபல வித மாகச் சொல்லுவார்கள். தேர்ந்த வைத்தியர்கள் தாதுவின் நடை யால் வியாதியை நிச்சயிக்கிறது மாத்திரமல்ல, நோயாளி இத்தனை நாள், அல்லது இத்தனை நாழிகை ஜீவித்திருப்பானென்றுகூட ஒரு வாறு கணக்கிடுவார்கள். இன்றைக்கே பிராணன் போய்விடு மென்று எல்லோரும் சொல்லிவிட்ட பிறகுங்கூட வைத்தியர்கள் கைபார்த்து, இன்னும் மூன்று நாளைக்குத் தாங்கும், மூன்றும் நாள் இராவுக்கு மேற்பட்டுத்தான் உயிர்நீங்கும் என்று அவ்வளவு கணக் காகவும் பேசுவார்கள் ; பேசியதுபோலவே நடக்கும். ஒரு ஆங் கில டாக்டர் ஒரு பிணியாளிக்குப் பலமான மருந்து கொடுத்து விட்டுப் பத்துரூபாய் வாங்கிச்செல்ல, மறுநிமிஷம் ஒரு தமிழ்வைத் தியர் அப்பிணியாளியின் நாடியைப் பார்த்து இரவுக்குள் முடிந்து விடும் என்றார். அவ்விதமே ஆகிவிட்டது. வியாதிகளின் தொகை நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு யென்று நமது பண்டிதர் கள் ஒரு வாய்நிறைந்த தொகை சொல்வது வழக்கம். வியாதிகளு க்கு ஔஷதங்களும், சிந்தூரம், மாத்திரை, பஸ்பம், சூரணம், கிரு தம், இலேகியம், தைலம், ரஸாயனம் முதலிய பலவகைகளுண்டு. புதுசாய்க் கண்டுபிடிக்க வேண்டியதாய் ஒன்றுமில்லாமல் மனிதர்

களுக்கு நேரிடத்தக்க சகல வியாதிகளுக்கும் முன்னமே ஔஷதங்கள் ஏற்பட்டிருக்கிறதாகச் சொல்லலாம்.

ஃ

இத்தேசத்து ஜனங்களுக்கு, சில மனிதர்களாலும், மந்திர சிகிச்சைகளாலும் வியாதிகள் நீங்குமென்கிற நம்பிக்கையுண்டு. ஆகையினால், மாந்திரிகர்களும் ஒருவித வைத்தியர்களாக எண்ணப்படுவர். கர்மவிபாகமென்ற நூலில் முந்தின பிறப்புகளில் செய்யப்பட்ட இன்ன பாவங்களினால் இன்ன வியாதிகள் நேரிடுமென்றும், இன்ன பிராயச்சித்தங்கள் செய்தால் அவைகள் தீருமென்பதும் சொல்லப்படுகிறது. முக்கியமாய் விதிக்கப்பட்ட சிகிச்சைகள்—தெய்வத்துக்கு வேண்டிக்கொள்ளுதல், ஜபம், ஹோமம், பிராமணர்க்கு போஜனம் செய்வித்தல், ஏழைகளுக்குச் சோறிடுதல் முதலியவையாம். இவற்றில் நம்பிக்கை இத்தேசத்தாருக்குக் குறைந்துவிட்டது. பிராமண போஜனம் என்பதற்கு இப்பொழுது மகிமையே இல்லை. எவன் பசித்தவனோ அவன் பஞ்சமனாயினும் அவனுக்கு இடுதலே கடவுளுக்குப் பிரீதியென்பது இக்காலத்துள்ளோரிற் பெரும்பாலாரது கொள்கை. சரீரத்தாலுண்டான வியாதிகள் சரீரத்தோடு சம்பந்தப்படும் ஔஷதங்களாலன்றி வேறு வகையால் தீராதென்பதும் தற்காலத்தில் பெரும்பான்மையோரின் அபிப்பிராயம்.

ஃ

மற்ற தேசங்களிலிருப்பதுபோல் வைத்திய சாஸ்திரத்தில் பரீட்சை கொடுத்துத் தேர்ந்தவர்கள்தான் வைத்தியம் செய்யலாமென்கிற ஏற்பாடு நமது நாட்டிலில்லை. இப்போது இத்தேசத்தாருக்குள் கிளம்பியிருக்கிற வைத்தியர்களை யாரால் கணக்கிடமுடியும்? இவர்கள் நாது நடைகளைப்பற்றிச் சொல்லுகிற நாலுஐந்து பாட்டுகளையும், சில லேகியங்கள் தைலங்கள் பண்ணுகிற முறையையும் தெரிந்துகொண்டபின் மகா பண்டிதர்கள் போன்றும் விளங்குவர். வைத்தியர்களிடத்தில் நல்ல ஞானமிருந்தாலும் சிலருக்குப் பணம் பறிப்பதையே நோக்கமாகக்கொண்ட குணம் அதிகம். எளியவனென்றுகூட இரங்கமாட்டார்கள். இத்துடன் கொடிய கண்டகத்தனமும் சில இந்து வைத்தியர்களுக்கு உண்டு. இதைக் குறித்துத் தனியாக மற்றோரிடத்தில் எழுதியிருக்கிறோம்.

ஃ

குழந்தை வைத்தியம், மருத்துவம், சத்திரவித்தை முதலானவைகள் சாதாரண வைத்தியர்களுடைய பங்கு. குழந்தை வைத்தியம் ஒவ்வொரு கிராமத்திலுமுள்ள கிழவிகளறிவார்கள். மருத்து

வம் நாவிதச்சிகளைச் சேர்ந்தது. பிரசவித்த பெண்களையும் சிசுக்களையும் மிகுந்த கவலையுடன் பாதுகாத்து வரவேண்டியது. அப்படியிருக்க, அவர்களை எழுத்து வாசனையறியாத ஞான சூன்யர்களான பெண்கள் கையில் ஒப்புவித்து மருத்துவம் பார்க்கவிடுவது வழக்கமாயிருக்கிறது. தற்போது ஆங்கிலம் கற்று சிலர் மருத்துவத்திற்காகவே புறப்படுகிறார்கள். அவர்களின் ஆடம்பரங்கள் வெகு விநோதம். அவர்கள் கையில் பிடித்துக்கொண்டிருக்கிற ரப்பர் குழாய் அவர்களுக்கு மிகுந்த மேதாவித்தன்மையைக் கொடுத்துவிடுகின்றது; எல்லோரையும் மயக்குகிறது. குழந்தை பிறந்த பிறகு பக்கத்தில் படுத்துள்ள ஆங்கிலங்கற்ற அம்மையாரை எழுப்ப வேண்டியிருக்கிறது. எழுப்பினும் பாதி தூக்க நிலை! எத்துணை சிரத்தை!! எவ்வளவு கவனம்!!! எல்லோருமே இவ்விதமென்று சொல்லவில்லை. இத்தேசத்தில் சத்திரவித்தைக்குப் பிறந்தவன் நாவிதன்; ஆனால், இப்போது ரணவைத்தியம் நாவிதர்களை விட்டு நீங்கிப் பெரும்பாலும் இங்கிலீஷ் வைத்தியமுறை தெரிந்தவர்கள் மூலமாய் நடந்து வருகிறது.

ஃ

நம்முடைய வைத்தியர்களால் அநேக வியாதிகள் சௌக்கியமாகிறதில்லையா? மாணிக்கமும் பாலைமணியும் ஒரே கடைவீதியில் விற்பதுபோல, எல்லாத் தேசங்களிலும் கற்ற பண்டிதரும் பாமர வைத்தியர்களும் உண்டல்லவாவென்று சிலர் கேட்பார்கள். நமது தேசத்தில் இப்போது நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பங்கு பாமர வைத்தியமும், ஒருபங்கு சரியான வைத்தியமுமாயிருக்கும்; ஆனாலும், இத்தனை அநியாயம் எங்கும் இராது. வயிறு வளர்ப்பதற்குத் தெரியாதவர்களெல்லாம் வைத்தியராயினர். எவ்வளவோ மருந்துகளை விலைக்குப் பெற்று உபயோகித்துக் குணம் காணாதவர் எண்ணிலர். இதனால் இந்து வைத்தியர்கள் என்றால் பொதுவாக அவர்கள்மீது ஜனங்களுக்கு அவநம்பிக்கை யுண்டாயிருக்கிறது. ஒருவன் பிணியாகப் படுத்துவிட்டால் எந்த வைத்தியரிடம் போவதென்பது பெரிய கேள்வியாகவும் தத்தளிப்பாகவும் ஆகிவிடுகிறது. வைத்தியத்தினா லுண்டாகிற நன்மைகள் யாவற்றையும் இத்தேசத்தார் பெறவேண்டுமானால், நமது வைத்திய நூல்களைச் செவ்வையாய்க் கற்றுணர்ந்து லோகோபகாரமான வைத்தியத் தொழிலைத் தம்முடைய மனச்சாட்சிக்கேற்ப நடத்தவேண்டுமென்ற எண்ணமுடையவர்கள் மாத்திரம்தான் வைத்தியர்களென்று வெளியே வரத்தக்கவர்களாவர். இவ்விதம் இந்து வைத்தியர்களில் தக்கோரைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் நம்மவர் முயலாவிடினும், வெகு காலத்திற்குப் பிறகேனும் நமது அரசாங்கம் இதில் தலையிடுவதும் கூடும்.

---

# சிறுமணித்திரள்

(278-ம் பக்கத் தொடர்ச்சி.)

1030. தனது ஆபரணங்களை யெல்லாம் பெட்டியில் அடுக்கடுக்காக வைத்து, தன் ஆடைகளை யெல்லாம் ஆசையோடும் ஒருதடவை எடுத்துப் பார்த்துவிட்டுத் தன் அறையைப் பூட்டிக்கொண்டு பிரஸவ அறைக்குச் சென்ற பெண் மறுபடியும் அவற்றை வந்து திறந்து பார்க்காமலே கண் மூடிக்கொண்ட துயரப் பெருக்குகளும் உண்டு.

1031. நமது வீட்டிலேயே வைத்துச் சாப்பிடக்கூடிய அன்னத்தை ஒரு கோயிலில், ஒரு உத்யானவனத்தில், ஒரு ஆற்றங்கரையில், ஒரு கோலாகலம் நடக்கும் இடத்தில் வைத்துக்கொண்டு புசித்தால் மனதுக்கு எவ்வளவோ உத்ஸாகமாயிருக்கிறது.

1032. சன்யாசிகள் என்றால் திருப்தியாக உண்டு மடங்களிலும், சத்திரங்களிலும், தூங்குவதென்பதல்ல. உண்மையாக உலகத்துக்கு உழைக்கவேண்டிய கடன், பொறுப்பு, அவர்கள் மீதே அதிகமாகச் சார்ந்திருக்கின்றன. அதனை உணர்ந்தோர் எத்தனை பேர்?

1033. யானைக்குத் தனது செவிகளினிடத்திலே தான் விசேஷித்த அறிவைப் பகவான் கற்பித்திருக்கிறார்.

1034. ஒரு பெண்ணால் பாரதம், ஒரு பெண்ணால் ராமாயணம், ஒரு பெண்ணால் இந்திரனுக்கு ஆயிரம் கண்கள்; உலகநிகழ்ச்சியும் விருத்தியுமே ஒரு பெண்ணால்தான் துவக்கமாகின்றது.

1035. பெண் இல்லாத இடத்தில் சப்தம் குறைவு, சக்தி குறைவு, ஒளி குறைவு, காரியம் குறைவு, சௌரவம் குறைவு, யாவும் பாதி வேலையாகவே முடியும்.

1036. சந்தேகப்பட்டவர்களுக்கு எல்லாம் சந்தேகமாகவே தோற்றும், அவர்கள் தங்களின் பத்தினியின் கற்பைக்கூட நம்பமாட்டார்கள். தான் சந்தேகித்தவர்கள் தூரநாடுகளில் வசிக்கச் செல்வதாகக் கேட்பின் அது ஒரு பெரும்புதையல் அகப்பட்டதுபோன்ற மகிழ்வைத்தருமாம்.

1037. ஒரு கற்புள்ள பெண்மணியை எதிர்த்துக்கொண்டு நற்சுகமும் உயர்பதவியும் பெற்றதாக இதுவரையில் எந்த சரித்திரமும் ஏற்பட்டிருக்கவில்லை.

1038. உலகத்தில் பெண்பாலர் அனைவரும் ஆண்பாலரால் நெருங்கப்படுகிறார்கள். ஆகவே, மனிதனை ஒரு வேடனாகவும், பெண்ணை ஒரு வேட்டையாகவும் கொள்ளவேண்டியிருக்கிறது.

1039. காதலித்த இருவரும் ஓரிடத்தில் சந்தித்தாலும்கூட, விவாக முடிச்சு விழுவதற்கு அய்யன் நியமித்த நாள் வரவேண்டியிருக்கின்றது.

---

பொறாமைக் கண்ணுக்குத் தனக்கு அவன் நலமே செய்திருப்பினும், அது தோற்றாமல், தன்னைவிட அவன் அதிகச் சிறப்பில் உயர்ந்து விட்டானே யென்றமட்டும் ஆத்திர கோபதாபம் மூளுமாம்.

1040. அண்ணன் சம்பாதிக்கத் தம்பி சிட்டாடிக்கொண்டு திண்ணைத் தூங்கியாகத்திரிய, இவ்விதம் தம்பி தேட, அண்ணன் வீட்டில் வைபோகமாய் இருக்க, இப்படி எத்தனையோ இடங்களில் நாம்பார்க்கிறோம். தந்தை உழைப்பாளியாக, தனயன்சோம்பேறியாதலும் உண்டு.

1041. தன் தாயைச் சேர்ந்தோர் எவ்வளவுக்குப் புஷ்டியுள்ளவர்களாக இருக்கின்றனரோ, அவ்வளவுக்கும் தனக்கு ஒரு ஆதரணை அங்கு இருக்குமென்று நம்பிக் கொள்ளலாம்.

1042. தந்தையைச் சேர்ந்தவர்களோ பெரும்பான்மை தாயாதிவர்க்கமாயும், கெடுநினைவுள்ளவர்களாகவுமே இருக்கக் காணலாம்.

1043. இயற்கையின் கவர்ச்சியானது பிந்திய கூட்டுறவுக்கேற்ப முந்தியே மனத்தைப் பிடித்து இழுத்து ஒன்று சேர்த்துவிட முயலுவதும் பெரிய விசித்திரமே.

1044. வயதாலும், பருவத்தினாலும், குணத்தினாலும், விவேகத்தாலும் ஸமத்வமுள்ள பெண்ணும் யுவகனும் நேர்ப்பட்டுக் கொண்டால் அப்பால் கேட்பானேன்? நாள் எதற்கு?—நக்ஷத்திரம் எதற்கு?—பெற்றோரைக் கேட்பது எதற்கு? இருவர் மனமும் உடனே ஒன்றுபட்டுவிடுமன்றோ? [ஆயினும் பலர் அறியத் தெய்வத்தின் முன்பாகத் திருமணம் ஏற்பட்டால் தான் உண்மையான சிறப்பு உண்டாகும். ப-ர்.]

1045. மனோசம்பந்தம் முன்னதாகச் சொல்லிவைத்துக் கொண்டுவராமல் மின்னல் வீசுவதுபோன்று திடீரென நேர்வதன்றோ?

1046. மனோவேகத்தை, மனோகதியை, மனோசம்பந்தத்தைத் தடுக்க யாராலாகும்?

1047. பெண்கள் காதல்கொண்டாலும், அலுதக் காட்டாது மனதில் அடக்கியாளும் திறமை மிகுந்தவர். அத்திறமை பெண்பாலாருக்கு இயற்கையில் அமைந்தது.

1048. ஆடவர்கள் தங்கள் மனைவி உயிருடன் இருக்கும் வரை வெகுநேசமாக அன்பு குலாவுகிறார்கள். அந்த மனைவியின் சகோதரர்களையும் பந்துக்களையும் வெகு பட்சமாக உபசரிக்கிறார்கள். அந்த மனைவி கண்மூடினாலோ, தக்ஷணமே வேறு மனைவியைத் தேடத் தலைப்பட்டுவிடுகிறார்கள். பழைய மனைவியோடு அவளைச் சேர்ந்த சகோதரர் உறவினர் யாவரையும் மறந்து கை உதறிவிடுகிறார்கள். இப்போது இவர்கள் கூடிக் குலாவுவதெல்லாம் புதிய மனைவியோடும் அவளுடைய உற்றார் உறவினரோடுந் தான். ஹா! ஆடவர்களின் விஸ்வாச காதகம் எத்துணைக் கொடியதாயிருக்கின்றது?

P. G. குலசேகரன்,

'மனோரஞ்சினி விலாஸ்", ராயபுரம்.



---

ஒருவன் வீட்டிலுள்ள மரத்தை அவனில்லாதபோது வெட்டிவிட்டு அவமானப்படுத்த நினைக்கையில், வெட்டப்போகிற தினத்தன்று அவன் வந்துவிடும்படியாகி வெட்டுவது தடைப்பட்டாலும், அவ்விதம் வெட்ட நினைத்த சண்டாள நினைவுக்குப் பதிலாகத் தான் குடி இருக்கும் வீட்டிலுள்ள மரத்தைத் தன் வார்த்தையை அலக்ஷியம் செய்துவிட்டு மற்றவர்கள் வெட்டிவிடுவார்களாம். பிறனை அவமானப்படுத்த நினைத்ததற்குத் தானே அவமானப் படும்படி கடவுள் இப்படிச் செய்கிறாராம்.

# அரிய கேள்விகளும் விடைகளும்.



மிலெட்டஸ் என்ற மகானை ஒரு குதர்க்கக்காரன் சிக்கலான சில கடினமான கேள்விகளைக்கேட்க, மிலெட்டஸ் அவைகளுக்கு மிகவும் தீர்மானமாக இறுத்த விடைகள்.

1. எது மிகப் பழமையானது? கடவுள்தான் மிகப் பழமையானவர்; ஏனெனில், அவர் இல்லாத காலம் இல்லை.

2. எது எல்லாவற்றிலும் சிறந்த அழகு பொருந்திய பொருள்? உலகந்தான். ஏனென்றால், அது கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டதாதலின்.

3. எது எல்லாவற்றிலும் பெரியது? ஆகாசந்தான். அதுவே எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறது.

4. எது எப்பொழுதும் சாசுவதமானது? நம்பிக்கைதான்; மனிதன் எல்லாவற்றையும் இழந்தாலும், நம்பிக்கை மட்டும் அவனைவிட்டுப் பிரிவதில்லை.

5. எது எல்லாவற்றிலும் சிறந்தது? நற்குணமே. அஃதின்றி யாதோர் நன்மையுமிலது.

6. எது எல்லாவற்றிலும் தீவிரமானது? மனிதனது உள்ள நிகழ்ச்சிதான்; ஏனெனில், ஒரு நிமிஷத்திற்கும் குறைந்த நேரத்தில் அது இவ்வண்டத்தின் எல்லைக்குப் பறந்து சென்றிடுவதாதலின்.

7. எது எல்லாவற்றிலும் வன்மை பொருந்தியது? அவசியம் ஏற்படுதலே; அது வாழ்க்கையின் எத்துன்பத்தையும் எதிர்த்துச் செல்லச் செய்கின்றது.

8. எது எல்லாவற்றிலும் சுலபமானது? பிறருக்குப் புத்திமதி கூறுவதுதான்.

9. எது எல்லாவற்றிலும் கடினமானது? தன்னைத் தானே அறிந்துகொள்வதே.

10. எல்லாவற்றிலும் அதிக ஞானமுடையதெது? காலந்தான். அதுவே எல்லா விஷயங்களையும் கண்டறிவது.

ச. முனிஸ்வாமி பிள்ளை,
சரஸ்வதி சபைத்தலைவர்,
டர்பன்;—நெட்டால்.

---

ஒரோகாட் கல்யாணம் முன்பு எவரோ ஒருவர் செய்யப்போக, இப்போதோ அது பணத்தின் கஷ்டத்தில் எங்கும் வழக்கமாகிவிட்டது. விவாக அழைப்பில் வெற்றிலைப் பாக்கு தட்டுத் தட்டாய்க் கொட்டுவதை எவரோ ஒருவர் நிறுத்தப்போக, அதில் ஒருபெரும் செலவு குறைவது கண்டு எல்லோரும் அதை நிறுத்தி விவாகப் பத்திரிகை மட்டும் கொடுத்துவிட ஆரம்பித்து விட்டனர். எல்லாம் காலத்திற்சேற்ற கோலம்!



ஒருவன் தன் விவாகத்திற்கென்று தானே சென்று தாம்பூலம் வைக்கிறான். அப்பொழுது அவன் ஒண்டிமனிதனாகவே அலக்ஷியமாய்த் தோன்றினும், அவனது விவாக முகூர்த்த வேளையில் பார்ப்பின் அங்கு அவனுக்காக எவ்வளவு பேர் வந்திருந்து கனப்படுத்துகிறார்களென்பது தெரியவரும்.




## 3. இல்லறம்.

(139-ம்பக்கத் தொடர்ச்சி.)

### 283. "இட்டவன் இடாவிட்டால் வெட்டுப் பகை".

இடுகிறவரை உறவு. பிறகு காலபேதத்தால் கைகடித்துப்போய் இட முடியாவிட்டால், அல்லது சிலநாள் இட்டு, பிறகு தங்களின் கஷ்டத்தை வணக்கமாகத் தெரிவித்துக்கொண்டால், அல்லது வந்தவர்களைத் தக்கவாறு கவனிக்க முடியாவிட்டால், நேற்றிரவு பருகுவதற்குப் பால் தந்து இன்றிரவும் அவ்விதம் தரமுடியாமல் ஜாடையாக இருந்துவிட்டால்-உடனே வந்துவிடுகிற தய்யனே பெரிய மனஸ்தாபம்! இந்தத் தரித்திரம் பிடித்த வீட்டுக்கு இனி என்றைக்கும் வரக்கூடாது, எட்டியும் பார்க்கக்கூடாது என்று தூற்றத் தொடங்கிவிடுகிறார்கள். கோபித்துக்கொண்டும் போய்விடுகிறார்கள். இது வரை இட்டு உபசரித்ததெல்லாம் வீணாய் விடுகிறது.

### 284. "இட்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாமா?"

நினைப்பதுதான் அதிகம். இப்போது விரோதிகளாக இருப்போரெல்லாம் நம் வீட்டில் முன்பு பலநாள் குந்திக்கொண்டு அதிகாரத்தோடும் புசித்தவர்கள் தான். அவர்கள் வீட்டில் புசித்தோமேயென்று என்றைக்கும் விசுவாசமா யிருப்போர் எங்கோ ஒன்றிரண்டு பேர் தான்.

### 285. "காய்ந்த சுண்ணும்பையும், வதங்கின வெற்றிலையையும், இளைத்த ராஜாவையும் விடக்கூடாது."

இல்வாழ்வில் இது ஒரு முக்கியமான தர்மமாகும். வாழ்வு எவருக்கும் சதமல்ல. தாழ்ந்த நிலையிலிருப்போருக்குத் தங்கள் நிலைமை என்றுமுள்ள வழக்கமாய், சாதாரணமாகவே தோற்றும். ஆனால், உயரிய வாழ்விலிருந்து விளங்கி, மாடிவீட்டில் வாழ்ந்து, காலபேதத்தால் யாவும் இழந்து, திக்கற்றுப் போய்க் கூரைவீட்டில் வாழுபவர்க்குத் தங்களின் நிலைமையைக் குறித்து எவ்வளவோ ஸஞ்சலமாயும் நாணமாயும் இருக்கும். முன்னைப்போல் தங்களை மதித்து ஏற்றுக்கொள்வார்களோ—அல்லது தாங்கள் போன இடத்தில் அவமானப்பட நேருமோ என்றும் கலங்குவார்கள். அத்தகையோரை நாம் முக்கியமாகக் கவனித்து முன்னைவிட அதிகமான மரியாதையும் மதிப்புமாக நடத்தி அவர்களின் வியாகூலத்தை மாற்றவேண்டியது கடமை. செல்வமும் வறுமை

---

உத்தமனை எதிர்த்துப் பகைக்கும் ஒவ்வொரு நிமிஷமும் தனது விருத்தி காலம் குன்றி தனது க்ஷேமமும் வாழ்வும் நாசமாகத் தொடங்குமாம்.

யும் ஒரு நிலையற்றதாதலின், அன்னோது பழய ஐசுவரிய நிலைமைக்காகத் தாங்கள் மரியாதை செய்யவில்லையென்றும், அவர்களின் பொருட்டாகவே கௌரவப்படுத்துவதாகவும், அவர்களின் மேலான ஸ்திதி மாறிவிட்டபோதிலும், அவர்களின் பூர்வ கௌரவத்திற்கு ஒருபோதும் மதிப்பு குன்றுதென்றும் காட்டும் வண்ணமாக அவர்களைக் கனப்படுத்தி நடத்தவேண்டும். அவ்வாறு நாம் பெருந்தன்மையுடன் நடந்துகொண்டால்தான் நமது தற்கால வாழ்வும் நமக்கு நிலைக்கும். கடவுளின் ஆசியும் நமக்கு உண்டாகும். நமக்கு அவர்களிடமிருந்து பிரதிபலன் வேண்டியதேயில்லை. சௌரவஸ்தர்களான அவர்கட்கு நம்மாலியன்றதை மனஸ்பூர்வமாகச் செய்யக்கடவோம். மேலும் ஒரு விஷயம். எவரெவர் கடவுளின் அருளுக்குப் பாத்திரமானவர்களோ, அவர்கட்கே எல்லாப் பொல்லாப்பும் நேரும். பகவான் தம்மையே நம்பியவர்கட்குள்ள உலக ஆசைகள் முற்றும் விட்டுப்போகும்வாறாக, அவர்களிடம் முக்கியமாய் உள்ளவற்றை அபகரித்துக்கொள்கிறார். எத்தனையோ பக்தர்கள் பரம ஏழைகளா யிருந்திருக்கின்றனர். அவர்களது இவ்வுலக ஐசுவரியாதி போகங்கள் சோதனைக்குழியில் விழுந்தாலும், பரலோக சாம்ப்ராஜ்யமானது அவர்களுடைய சொந்த சொத்தாயும், அந்த விஷயத்தில் அன்னோர் மஹா பாக்கியவான்களாகவு முள்ளார். ஆதலின், சோதனைக்குட்பட்டோரை யெல்லாம் கடவுளுக்குப் பிரியமானவர்களாக நினைத்து, அதற்குத் தகுந்த மதிப்பு தந்து, மற்றவர்களைவிட அவர்களை மேன்மையாகப் பாராட்டவேண்டுமென்பது இப் பழமொழியின் தத்துவப்பொருளாகும்.

286. "காலகதியை யாரும் கடக்கமாட்டார்கள்."
287. "காலஞ் செய்கிறது, கோலஞ் செய்யாதே."
288. "காலஞ்செய்த கோலத்திற்கு ஆரை வெறுக்கிறது?"

இம்மூன்று பழமொழிகளும் காலகதியை விவரிக்கின்றன. 285-ம் பழமொழிக்கு எழுதிய குறிப்பு இங்கும் பொருந்தும்.

289. "கையில் இருக்கிற சோற்றைப் போட்டுவிட்டு, எச்சிற் சோற்றுக்குக் கை ஏந்தினதுபோல."
290. "கையில் இருக்கும் கனியை எறிந்து, மரத்திலிருக்கும் கனியைத் தாவுவதுபோல."
291. "கையிற் பறவையை விட்டுக் காட்டுப் பறவைக்குக் கண்ணி வைக்கலாமா?"

எதிர்பார்க்கும் ஒன்று அது வந்த காலத்துக்குத்தான் நிச்சயம். ஒரு சமயம் வாராமலும் போகலாம். ஆகவே, கையிலிருப்பதைப் பத்திரமாய்க் காத்துச் சிக்கனமாகவே எதையும் நடத்தவேண்டும். நாளை ரூபாய் வருமென்றெண்ணி, இன்று கையிலுள்ள யாவற்றையும் செலவிட்டுவிட்டு, நாளை எதிர்பார்த்தவாறு பணம்வாராமற் போகுமானால் எவ்வளவு பெரிய திண்டாட்ட

---

தன் வஞ்சக மனத்தை மற்றவர் அறிந்துகொண்டு தன்னை அடிபோடும் விலக்கும்போது, இன்னும் என்னவிதமாய்க் கெடுப்பது என்கிற யோசனைகளில் புத்திபோய் இன்னும் அதிகமான வஞ்சக மனதுள்ளவனாக மாறச் செய்யுமாம்.

மாகும்? புதிதாய் வந்த மனிதர்களின் நட்பையும் உறவையும் நம்பிப் பழய மனிதர்களைக் கேவலப்படுத்திப் பகைத்துக்கொள்வது புத்திசாலித்தனமாகாது. பழய மனிதர்கள் எவ்வளவோ காலமாக நம்முடன் பழகி நமது குணங்களை யறிந்து, நமது கோபம் ஆத்திரங்களுக்கெல்லாம் பொறுமை காண்பித்து, நமக்குப் பக்கத்துத் துணையாய் பரம உபகாரிகளாய் இருந்தோராவர். அத் தகையோரை இன்று நமக்குக் கிடைத்த புது உறவு—நட்புகளை நம்பி அலக்ஷியம் செய்வதும் பகைத்துக்கொள்வதும் சரியாகாது. நமக்குக் கிடைத்த புது மனிதர்கள் எத்தகைய ஸ்வபாவமுள்ளவர்களோ யார் கண்டார்கள்? புது வெள்ளம் விரைவில் வடிந்து போவதுபோல இந்தப் புது நட்பும் உறவும் சீக்கிரமே பிரிந்து விலகிப்போவதாயும் இருக்கலாம். இப்புது மனிதர்கள் பிறகு நமக்குப் பகைவராக ஆவதாகவும் இருக்கலாம். அல்லது நம்முடன் இப்பொழுது சிரித்துப் பேசுவது நமது கழுத்தறுக்கும் யோசனைக்காகவும் இருக்கலாம். ஒரு வஞ்சக உத்தேசத்துடன் நம்முடன் குலாவுவதாகவும் இருக்கலாம். இப்புது மனிதர்களின் குணங்களைக் கொண்டாடிப் பழய மனிதர்களின் குற்றங்களைத் தூற்றி விலக்குவதில், பிற்காலத்திலே இப்புது மனிதர்கள்—நமது பழய மனிதர்களே சிலாக்கியமானவர்களென்று நாம் நினைக்கும்படி—நமக்கு எதிரிடையாகவும் ஆகிவிடலாம். இவ்விதமே, புதிதாக வாங்கிய வீட்டை நம்பிப் பழய வீட்டை விற்றுவிட்ட பிறகு, புதுவீடும் அதை வாங்கியதில் பட்ட கடன்களுக்காக ஏலத்தில் விழுந்து இன்னொருவர் கைக்கு மாறிப்போக, அப்போது நாம் பழயவீட்டை விற்றதற்காகத் துக்கப்படவேண்டி வரும். எனவே, நம் கையிலிருப்பதையும், நமது பழய உறவு—நட்பையுமே மேலானதாக மதித்து நடக்கவேண்டும். அந்தப் பழயதுக்குப் பிறகு இப்புதியது வந்தால் பழயதுடன் சேர்ந்து இரண்டாந்தரமானதாக இருக்கட்டும். அவ்விதம் ஒருபடி தாழ்ந்த தன்மையிலேயே புதியதை வைத்துப் பழயதைக் கௌரவிப்பதே நன்றாகும். புதிய செடி வைப்பதற்காகப் பழய மரத்தை வெட்டுவது சரியாமா? புது செடி பட்டுப்போனாலோ—? ஆதலின்,

292. "கைக்குருவியைக் கொண்டு காட்டுக் குருவியைப் பிடிக்க வேண்டும்."

அதுதான் சரியான வழி. கையிலுள்ளதையும் கெடாமல் வைத்துக் கொள்ளவேண்டும். அதைக்கொண்டே புதியதுக்கும் எட்டிப் பார்த்துக் கைப்பற்றிக்கொள்ளவேண்டும். இரண்டும் கிடைக்கப்பெற்று மகிழவேண்டும். இதற்குப் பொறுமையும், சகிப்பும், முன் யோசனையும் அதிகமாகத் தேவை.

293. "கையில் இருந்தால் கர்ணன்."
294. "கையில் இல்லாதவன் கள்ளன்."
295. "கையில் உண்டானால் காத்திருப்போர் ஆயிரம் பேர்."
296. "உண்டானபோது கோடானுகோடி உறவின் முறையார்."

தன் கையில் உள்ளதைப் பத்திரப்படுத்தி மிதமாகச் செலவிடுவோனே க்ஷேமமடைவானென்பது இதன்பொருள். தான் இப்பொழுது செலவிடுகையிலேயே பின்னுக்குத் தனது கைவறண்டு போகாவண்ணமும் ஒரு குறித்த அளவு கிதானமாகச் செலவிட்டு, இப்போது தனக்குள்ள புகழும் நற்பெயரும் எக்காலத்திலும் நிலைபெற்று நிற்கும்வாறு கவனித்துக்கொள்ளவேண்டும். தன் கையில் உள்ள தனத்தைப் பொருத்தே உலக கௌரவமும் தனக்கு ஏற்படும்.

297. "கைப்பொருள் அற்றவனைக் கட்டின பெண்டாட்டிகூட எட்டிப் பாராள்."

298. "கைப்பொருள் அற்றால் கட்டுக்கழுத்தியும் (கட்டினவளும்) பாராள்."

இது இல்லாதவனின் நிலைமை. இல்லாதவன் எவர்க்கும் பொல்லாதவனே. வீட்டில் ஒன்று களவுபோயினும், இல்லாதவன் மீதே சந்தேகிக்கவும் கூடும். ஆகவே, காலகதியால் அனைத்தும் இழந்துபோனவர்கள் பந்து மித்திரர்கள் அனைவரையும் விட்டுவிட்டுத் தூரநாடொன்றுக்குப் போய்விட்ட சம்பவங்களும் எத்தனையோ உண்டு ஆதலின், கையில் உள்ள காலத்தில் அதைப் பத்திரப்படுத்திச் சிக்கனவாழ்வு நடத்தவேண்டுமென்பதை இப்பழமொழிகள் குறிப்பிடுகின்றன. (தொடரும்.)

## சகோதரியின் பிரிவாற்றுமை.

ஆருயிர்ச் சகோதரமே! மனோகரமான ரஞ்சிதமே! நீ தினமும் 'தம்பி' என்றழைக்கும் கம்பீரத் தொனி என் காதில் படுகிறது. ஆயின், வானிற் கலந்த இவ்வொளியை இவ்வூனக்கண்களால் காண்பதற்கில்லை. நான் கலாசாலைக்குப் போகும்போது மிக்க அன்புடன் பலகாரம் செய்து தந்து வீட்டு வாசற்படி இறங்கும்வரையில் என்னையே பார்த்து நின்று, 'துட்டு இருக்கா?—இருக்கா?' என்று பன்முறை கேட்டு, இடுப்பில் சொருகி வைத்திருக்கும் துட்டைத் தந்து இன்புற்று 'பத்திரமாகப் போ' என்று ஆசி கூறுவீர். அந்தப் பாக்கியத்தை இன்று பாபியேன் அநுபவிப்பதற்கில்லையே! ஃ

நான் கலாசாலையினின்றும் மாலையில் திரும்பி வந்ததும், நாம் இருவரும் இரவு நெடுநேரம்வரையில் ஓயாது பேசுவோம். இன்று பள்ளியினின்று வந்ததும் என்னைப் புன்னகையுடன் அழைக்கும் முகத்தைக் காண்பதற்கில்லை! தாங்கள் வழக்கமாக உட்கார்ந்துபேசும் என் இடப்புறத்திலுள்ள நாற்காலி காலியாக இருக்கின்றது. மேஜையருகில் உட்கார்ந்ததும் தாங்கள் இல்லையே என்று திகைத்துச் சிந்தனையில் ஆழ்ந்து உருகுகின்றேன். ஐயோ! தங்களை இச்சிறுவயதில் இழக்க என்ன பாபம் செய்தேனோ நான்?

தங்கையைக் கொடுத்த இடத்தில் அவள் தன் கணவனுக்கு வேண்டிய உறவின் முறையாரை யெல்லாம் நெடுகத் தெரிந்துகொண்டு, அவர்கள் இன்னார், இவர்கள் இன்னார் என்று சொல்லுகையில், அவளுடைய தமயனுக்கு இந்த புது உறவுகளெல்லாம் ஏதோ ஒரு அந்நியமாகவே படுகிறதாம்.

# நடுக்கொள்ளை நூறு ரூபாய்.



"என்னை நீ பயமுறுத்திக் கொள்ளையடிக்க முடியாது. அந்தப் பழய காதலி கருப்புக் கட்டை செத்துவிட்டாள். அவள் உயிரோடிருப்பதாகவும், என்மேல் வழக்கு தொடரப் போவதாகவும் சொல்லிப் பணம் பறிக்க வந்தாயா?" என்றார் புரோபஸர் பொன்னுசாமி.

ஃ

"நான் வந்தது அவள் உயிரோடிருப்பதாய்த் தெரிவிப்பதற்கல்ல. உம்மைக் காதலித்து, நீர் மறுத்ததாலேயே தற்கொலைமரணமாய் முடிந்தாள். அவளுக்கு நீர் அவளைக் காணுமுன் பல காதற்கடிதங்கள் வரைந்தீர். அக்கடிதங்களை இப்போது நீர் புதிதாய்மணக்கப்போகும் செல்வராஜரின் புத்திரிக்கு அனுப்பி, நீர் படுமோசக்காரன் என்று தெரிவித்து விவாகம் நடவாதபடி செய்துவிட என்னால் முடியும். ஆனதால், இந்தக் காதற்கடிதங்களை எடுத்துக்கொண்டு உடனே நூறு ரூபாய் தந்தால்தான் நீர் தப்புவீர்" என்றான் கந்தன்.

ஃ

"பாழுஞ் சனியனே! நீ எங்கேயடா நடுவில் வந்தாய்? இந்தா நூறு ரூபாய் நோட்டு, தொலைத்துக்கொள். எங்கே அந்தக் காகிதக்கட்டை இங்கே கொடு."

ஃ

கந்தன் நூறு ரூபாய் நோட்டைப் பெற்றுக்கொண்டு காகிதக் கட்டைத் தந்தான். முதலில் இருந்த காகித உறை தன்னெழுத்தில் இருந்ததைப் பார்த்துவிட்டு, அதைப்பிரிக்க வெறுப்புற்று அப்படியே பெட்டியில் வைத்துப் பூட்டினார்.

ஃ

இந்த சம்பவத்திற்குப் பிறகு பொன்னுசாமிக்கும் செல்வராஜரின் புத்திரி புஷ்பாவதிக்கும் விவாகம் நடந்து தம்பதிகள் ஆனந்தமாயிருந்தனர். ஒருநாள் புஷ்பாவதி பொன்னுசாமியை நோக்கி, "என்னைத் தவிர நீங்கள் வேறு எந்தப் பெண்ணையாவது காதலித்ததுண்டா? உண்மையைச் சொல்லுங்கள்" என்றாள்.

ஃ

—'ஆம், ஒரு பெண்ணிடம் காதல் வைத்தேன். அவளே வெகு இனிப்பான கடிதமொன்றை முதலில் அனுப்பினாள். அதற்கு உடனே ஆசையோடும் பதில் எழுதினேன். இப்படி ஒரு மாதமாய்க் காதற் கடிதங்கள் வளர்ந்து கடைசியில் கோயிலில் சந்திப்பதென்று ஏற்பாடாகி, இரவு ஒன்பதுமணிக்கு அந்த அருமைக் காதலியை அவள் சகோதரன் கந்தன் மூலமாய்ச் சந்தித்தேன். ஹா! என்னென்

---

ஆடவரைத் தாழ்த்தி ஸ்திரீகளை உயர்வாகக் கருதி மனதாரப் பூஜிப்போருக்குத் தான் பிரம்ம ராக்ஷஸிகளை யொத்த மனைவிகள் வாய்த்து, வீட்டில் அன்பான புசிப்புக்கு வழியின்றி அடிக்கடி ஹோட்டலுக்குச் சென்று விதியை நினைத்து ஏங்க நேர்கிறது.

பேன், கருப்பைக் கட்டையாய் இருந்தாள். தேகத்தில் ஒரு நகையுமில்லை. கையில் கண்ணாடி வளையல்கள் அணிந்து அழுக்குச் சேலையுடன் பிச்சைக்காரிபோலத் தோன்றினாள். என் மனம் வெறுத்துப்போய் இந்த அழகு பவிஷிக்குத்தானா அத்தனை அருமையாய்க் காதற்கடிதங்கள் எழுதினாய் என்றேன். அதற்கவள் தன் காதல் உண்மைக்காதலே என்றும், தான் காதலித்தவர் ஸம்பூர்ணமான லாவண்யம் வாய்ந்த சுந்தராகவே இருக்கையில் தன் காதற் கடிதங்கள் எவ்வாறு பொய்க்கும் என்றாள். அவளது சமத்காரமான பேச்சுக்கு மகிழ்ந்தேனாயினும், அடுத்த நிமிஷத்தில் சொல்லாமலே கோயிலைவிட்டு வெளியில் சென்றுவிட்டேன். பிறகு அவள் எவ்வளவோ கடிதங்கள் எழுதினளாயினும் நான் பதில் தரவேயில்லை. தன் கடிதத்திற்குப் பதில் வராவிடில் தற்கொலை செய்துகொள்ளப் போவதாய் ஒரு ரிஜிஸ்தர் கடிதம் அனுப்பினாள். அதையும் ஒரு மூலையில் எறிந்து, அந்த விதமாவது அவள் இறந்து தொலையட்டுமென்று மனதில் நினைத்துக்கொண்டேன். பிறகு அவள் இறந்துவிட்டதாக இரண்டொருவர் மூலம் கேள்விப்பட்டபிறகே என் மனம் சமாதானமாயிற்று" என்றார் பொன்னுசாமி.

ஃ

—"அதற்குப் பிறகுதான் கந்தன் உங்களிடம் வந்து அவள் காதற்கடிதங்கள் என்று பொய்சொல்லிப் பயமுறுத்தி உங்களிடம் நூறு ரூபாய் நோட்டு பெற்றான்போலிருக்கிறது" என்றாள் புஷ்பாவதி.

பொன்னுசாமி:—உனக்கு அந்த சங்கதியை யார் சொன்னது? நீ வீட்டிற்குள்ளிருந்தபடியே எல்லாம் தெரிந்துவைத்திருக்கிறாயே?

புஷ்பாவதி:—தங்களை நான் காதலித்தவகையில் கந்தன் எனக்கு அதிக உதவிகள் செய்திருப்பதால், அதற்குச் சன்மானத்தை உங்களிடமே பெற்றுக்கொள்ளும்படி நீங்கள் பழய காதலிக்கு அனுப்பிய கடிதங்களின் மேலுறைகளை எடுத்துக்கட்டி அவனிடம் தந்தேன். அதற்குள்ளிருந்த கடிதங்களெல்லாம் என்னிடம் பத்திரமாயிருக்கின்றன.

பொன்னுசாமி:—அந்தக் கருப்புச் சிறுக்கிக்கு நான் எழுதிய கடிதங்கள் உன்னிடம் எப்படி வந்தன?

புஷ்பாவதி:—என் துரையே! தங்கமே! நான்தான் அந்தக் கருப்புக் கட்டை! நானே அந்தக் கருப்புச் சிறுக்கி. நீர் அழகு ஒன்றை மட்டுமே கவனிக்கும் குருட்டுக் குணமுள்ளவரென்று நான் கேள்விப்பட்டதால், அதை நேரில் அறியும்பொருட்டு என் முகத்தைக் கருப்பாக்கிக்கொண்டு அவலக்ஷண மூதேவியாய்க் கோயிலில் கந்தன் துணைகொண்டு உம்மைச் சந்தித்தேன். உமது கண்முன்பாக ஒரு உத்தமியின் நற்குணங்கள் மதிப்புபெறாமல், அவளது சிவப்புத்தோலொன்றே மேன்மைப்படுமென்று தெரிந்தது. இவ்வளவு நிச்சயபுத்தியற்ற மனிதரை எப்படி நம்பி நேசிப்பது என்று கலங்கினேன். விவாகத்தின் மூலமாகப் பலர் அறியத் திருமணம் முடித்து மாங்கல்யவதியானால், அப்போது நீங்கள் என்னைத் தள்ளிவிட முடியாதென்று என் தந்தை

---

பிரக்கியாதியானது எத்தனையோ மருந்துகளுடையவும், மனிதர்களுடையவும் குற்றங்களையும் குணமின்மையையும் மற்றவர்கள் நம்பமுடியாதபடி செய்து எல்லோராலும் சிலாக்கினை யுறும்படி உயர்த்தி விடுகிறது. அதில் மண்ணும் பொன் போல வெளியே தோன்றுகிறது.

யைத் தூண்டினேன். பிறகு நம்மிருவருக்கும் விவாகமும் நடந்தேறியது. ஏன் இவ்வளவு பாடுபட்டு உம்மை அடைந்தேனெனில்,———உம்மீது நான் கொண்டுவிட்ட அளப்பரிய காதலால்தான். இப்போது நான் அழகற்று வாடினும் என்னை நீங்கள் தள்ளிவிட முடியாமல் விவாகச்சங்கிலி உங்களைக் கட்டுப்படுத்துமன்றோ?

ஃ

என்று கூறித் தன் காதலனுக்கு முத்தங்கள் தந்தாள். அதேசமயம் கந்தன் அங்குவந்து பொன்னுசாமியை வணங்கி உங்களை நான் சேர்த்துவைத்த தக்ஷிணைதான் நூறு ரூபா நோட்டு என்றான். பொன்னுசாமி மகிழ்வும் நாணமும் தோன்றப் பிரமிப்பவரானார். உடனே தான் நூறு ரூபாய் தந்து வாங்கிய கடிதங்களின் கட்டைப் பீரோவிலிருந்து எடுத்துப் பிரித்துப் பார்க்க, அவைகள் முற்றும் வெறும் வெள்ளைக் கடிதங்களா யிருந்தன. இன்னொரு சிரிப்பும் சிரித்தார்.

K. R. சுந்தரகோபால்.

## ரவீந்திரநாதரின் பொன்மொழிகள்.

1. அன்பு சுதாவாகவே ஏற்பட வேண்டும்.

2. நான் பிறவிக்கவி. அந்த வழியிலேயே என்புத்தி சென்றது. கலாசாலையின் அறிவை வளர்த்துக் கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. சர்வகலாசாலையில் கீழ்த்தரப் பட்டமும் நான் பெற்றவனன்று.

3. தாரித்திரியத்தை வலுவில் தேடிக்கொள்கிறதில்லை. அதுவாகவே ஏற்படுகிறது.

4. இப்போதைய நிலைமையிலும், எதிர்காலத்திலும் நம்பிக்கையுடனிருப்பதுதான் உண்மையான சந்தோஷமாகும். அது ஒரு குழந்தைக்குத் தாயிடத்திலுள்ள உணர்ச்சி போன்றது. அதை விவரிக்க இயலாது.

5. வெறும் படிப்பில் மட்டிலன்றி வெளிச்சத்திற்காகவும் பாடுபடுவோரிடம் எனக்கு மிகுந்த அபிமானமேற்படுகிறது. அவர்கள் என்னை நேசிக்கின்றனர்.

6. அறிவைப் பெறுவது அதிர்ஷ்டவசம். வாழ்வின் பல நோக்கங்களையும் உணர்ந்து நடந்துகொள்வது அதிலும் மேலான பாக்கியம். இயற்கைத் தூய்மையை அவர்கள் காப்பாற்றிக் கொள்வார்களாக.

அவரவர்கள் நாற்காலியில் அவரவர்கள் பெரியவர்கள். அவர்களிடம் வருவோர் அவர்களுக்குத் தாழ்ந்து மற்றொரு நாற்காலியில் அமரவேண்டியதே. இப்போது பெருமையாய் நாற்காலியில் உட்கார்ந்திருப்போர் பிறரிடம் செல்லும்போது அங்கு அவர்கள் தாழ்மையுடன் மற்றொரு நாற்காலியில் அமரவேண்டியவர்களே. அவனவன் வியாபார ஸ்தலத்திலே—வீட்டிலே அவனவனும் தன் நாற்காலியிலே சாய்ந்துகொண்டு ஒரு ராஜாதான்!

அதிர்ஷ்டத்துக்கும் காமத்துக்கும் எப்போதுமே கண் குருடுதானோ?

# கத்திரிக்கோலின் லீலைகள்.

### நூலாசிரியர்கள்.

இவர்களது கைப்பெட்டியில் பல வித சமாச்சாரப் பத்திரிகைகளும் டிமமித்தான் போன்ற பல வகைக் காகிதங்களும், மைக்கூடு, பேனு முதலியனவும் ஓர் கத்தரிக்கோலும் அடங்கியிருக்கும். இவர்களிடம் உள்ள கத்திரிக்கோலானது சமாசாரப் பத்திரிகைகளில் காணப்படும் முக்கியமான விஷயங்களைக் கொண்ட பகுதிகளைக் கத்தரித்து வைத்துக்கொள்ள உதவுகின்றது.

### தையற்காரர்கள்.

இவர்களிடம் உள்ள கத்தரிக்கோலானது சட்டை, கோட்டு, முதலான அங்கிகளைத் தயாரிக்க வேண்டியதற்காக அவரவர்களது அளவுக்குத் தக்கபடி பற்பல பாகங்களாகக் கத்தரிக்க உதவுகின்றது.

### திருடர்கள்.

இவர்களிடமும் ஓர் கத்தரிக்கோல் உண்டு. இவர்களுள் ஓர் சிலரைப் பார்ப்பின் 'இந்தப் பூனையும் அந்தப் பாலைக்குடிக்குமோ?' எனக் கருதும் வண்ணம் அவர்களது படாடோப உடைகளினுலும், நடைகளினுலும் பிறர் கருதும்படி விளங்குவர். சமயம் பார்த்து நகை நட்டுகளைக் கத்தரிக்க இவர்கள் கத்தரிக்கோலை உபயோகிக்கிறார்கள்.

### புத்தக பைண்டர்கள்.

கத்தரிக்கோலின் உதவி இவர்கட்கும் அவசியமானது. அளவுக்கு மேல் நீட்டிக்கொண்டிருக்கும் கடிதங்களையோ, அட்டைகளையோ காலிக்கோ துணியையோ, நூல்களையோ துண்டிக்க இவர்களது கத்தரிக்கோல் அவர்கள் தொழிலுக்கு உதவுகின்றது.

### ஜவுளிக்கடை.

அவரவர்கள் தேவைக்குத் தக்கபடி ஜவுளிகளைத் துண்டித்துக் கொடுக்கக் கத்திரிக்கோல் ஜவுளிக் கடைக்காரர்கட்கு உதவுகின்றது.

### ஆஸ்பத்திரி.

டாக்டர்களால் உபயோகிக்கப்படும் கத்தரிக்கோலானது, பெரிய ரணங்கள் போன்ற தீராத வியாதிகளை ஆப்ரேஷன் செய்யப்படும் தருணத்தில் கத்தரிக்கோலின் உதவியும் அவர்கட்குத் தேவையுள்ளது.

### தபாலாபீஸ்.

அன்றன்று வரும் தபால் பைகளை உடைக்கவும் தம் தம் ஆபீஸ்களிலுள்ள தபால்களைக் கட்டுக் கட்டி அனுப்பவும் இவர்கட்கும் கத்தரிக்கோலின் உதவி அத்யாவசியமானது.

### பரியாரிகள்.

நவீன நாகரீகர்களின் தலைமயிரை 'கிராப்' செய்து விடுவதற்கும், அழகெனக்கருதும ஷோக்கர்களுக்கு 'கண்ணுக குடுமி' வைத்து ஒரே மட்டமாய்க் கத்தரித்து விடுவதற்கும் இவர்களால் உபயோகிக்கப்படுகின்றது.

### தோட்டக்காரர்கள்.

தோட்டங்களில் அநேக செடிகள் கிளைகள் கொடிகள், கன்றுகள், வேலிப்பயிர்கள் முதலிய செடி கொடிகளைக் கத்தரித்து ஒரே மட்டமாகவும் அழகாகவும் இருப்பதற்குப்

---

எத்துணைச் சோதனையிலும், கடவுள் தன்னை நம்பியவனைக் காக்கும் காட்சி மிக்க மாட்சியுடையதென்பார்—அந்த வகையில் அனுபவங் கண்டோர்.

பலவிதமான நூதனக் கத்தரிக் கோல்கள் உபயோகப்படுத்தப்படு கின்றன.

கத்தரிக்கோலின் பெருமை.

இம்மாதிரியான பல நுணுக்க வேலைகளைக் கத்தரிக்கோல் செய்கின்றது. கத்தியோ, காட்டாரியோ செய்ய முடியாத சில வேலைகளைக் கத்தரிக் கோல் வெகு சுலபமாகவும் நேர்த்தியாகவும் செய்கிறது.

என் கத்தரிக்கோல்.

எனது எழுதுகோல் எவ்வளவு அருமையான வேலை செய்கின்றதோ அதுபோல எனது கத்தரிக்கோலும் எனக்கு உற்றதுணை. என் கைக் கத்தரிக்கோலை யாராவது எடுத்தால் எனக்கு வந்துவிடுகிற கோபம் அசாத்யம். வாழிய கத்தரிப்பாவாய். ஆசிரியர்களின் கையில் எழுதுகோல் ஒரு அருமைப் பிள்ளைபோலும், கத்தரிக்கோல் ஒரு சின்னத் தங்கச்சி போலும் விளையாடுகின்றன. (தமிழ்நேசன்.)

[இவ்வியாசத்தையும் ஆசீர்வதிக்கப்பட்ட ஒரு கத்தரிக்கோலால்தான் கத்தரித்து இங்கு பதிப்பித்திருக்கிறோம்.—ப-ர். அமிர்தகுணபோதினி.]

## எளிய நடையில் எழுதுதல்.

பாஷா ஞானத்திற்கும் உயர்வுக்கும் இலக்கண நடையும் வேண்டியதுதான். ஆயினும், தமது வியாசங்களையோ நூல்களையோ யாவரும் சுலபத்தில் அறிந்து வாசிக்க வேண்டுமெனில், எளிய நடையே உத்தமம். வேண்டுமென்றே வாசக நடையைக் கடினமாக்கிவிடுவதில், அவ்வகையில் எழுதப்படுவனவற்றின் உட்பொருள்களைச் சுலபத்தில் அறிந்துகொள்ள முடியாதுபோகின்றது. எளிதாகத் தெரிவிக்கக்கூடிய கருத்துகளையும் கடின நடைகொண்டு மூடிவிடுகிறார்கள். விஷயத்தின் உட்பொருள்கள் முக்கியமா? அல்லது இலக்கண நடைப்பயிற்சி முக்கியமா என்பது கேள்வி. காலஞ்சென்ற பண்டித நடேச சாஸ்திரியார் மஹா ஸமுத்திரமான வான்மீகி ராமாயணத்தை வெகு சுலபநடையில் அற்புதமாய் அமைத்துள்ளார். உயர்ந்த கருத்துகளை எளிய நடையில் அமைப்பதுதான் பெரிய வித்வத்தன்மையாகும். இதனால் உயரிய நடை கூடாதென்பதன்று.

ஒருவனை வீட்டுவாயிலில் வருதேயென்று ஆயிரம் முறை சொல்லிக் கண்டித்திருந்தும், அவன் வலிய வருவதற்கான சந்தர்ப்பங்களை யுண்டாக்கிக் கொண்டு மெதுவாகத் தலையை நீட்டுகிறான். அந்த சந்தர்ப்பத்தில் அவனுடைய உதவியும் வேண்டியதாயிருந்து அவனைக் கண்டிக்க முடியாமற் போகிறது. ஆயினும் சீக்கிரமே மறுபடி பெருஞ் சண்டை மூளுகின்றது.

# ஸ்ரீமதி சுந்தரம்மாள்.

366-பக்கத் தொடர்ச்சி.)

## II



ஓ! என் செல்வமே! செல்வச் சுந்தரியே! என் மனம் போல் நடந்த மங்கையே! என் வாழ்வை இன்ப வாழ்வாக்கிய எழிலணங்கே! துன்பங்களை யெல்லாம் தூரத்தில் நிற்கவைத்த தோகையே! என் நாவிற்கினிய நற்கறிகளைச் செய்து நல்லுணவுதந்த நங்கையே! நான் தூங்கும் வரையில் விழித்திருந்து எனக்கு வேண்டும் பணி யாவும் செய்து, எழுமுன் எழுந்திருக்கும் இயல்புடையாளே! நீ துன்பப்படுவாயென்று நான் மறைப்பினும் என் முகக்குறியாற் கண்டு உபசாரணையாலும், நல்ல நீதியாலும் அத்துன்பத்தை மாற்றும் சுரிகுழலே! நான் உன்னைப் பலகால் பிரிய நேரிடினும், நெடுந்தூரத்தி லிருப்பினும், உன் மனத்தை என் பின்னே செலுத்தி உன் நல்லெண்ணங்களைத் தூது போக்கி என் சங்கடத்தைத் தீர்த்த தையலே! நாகரீகக் குறைவால் புருஷனைக் கண்டு நடுங்கும் பெண்ணும், கல்வியின் முதிர்ச்சியால் பெண்ணுக்கடிமையான புருஷனும் உள்ள இந்நாளில், "இவளே எனக்கேற்ற மனைவி" என்று நான் போற்ற வைத்ததன்றி, உன் தோழியரும் உன் தாய் வீட்டாரும் உன் மாமியகத்தாரும் மற்று முள்ளாரும் மகிழ வைத்த மாதுசிரோன்மணியே!

ஃ

பொன்னும் பூமியும், பொய்யுடலைக் காக்கு நிமித்தமே யென்றும், இப் பொய்யுடல் புருஷனுக்குச் சேவை செய்வதற்கென்றும் அடிக்கடி பிறரிடம் பேசி என் பொருட்டு உன் உயிரைக் காக்கவெண்ணித் தேடிய பொருளெல்லாம் செலவிட்ட என் செல்வியே! என் வார்த்தைக்கு எஞ்ஞான்றும் எதிர் கூறுதவளும், என் அறிவை வளர்த்தவளுமாகிய என் அரும் பொன்னே! "மாமி மெச்சும் மருகியில்லை" என்னும் வாக்கை வையகத்தில் பொய்யாக்கி உன் மாமியார் உன்னை மடிமீதிருத்தி வாயாரப் புகழச்செய்த மடமயிலே! நீ இறந்த பின் உன் அக்காள், உன் பிணத்தருகில் குந்தி, "என் தங்காய் சுந்தரீ! நீயும் உன் புருஷனும் எல்லையற்ற காதலுடையீரென்றும், உன் குடி வாழ்க்கை மிகச் சிறப்புடையதென்றும் நான் பிறர் கூறக் கேட்டுள்ளேனாயினும் நீயும் உன் புருஷனும் பேசி மகிழக் காணுத பாவியேன். உன் வாழ்வு அற்ப வாழ்வாயிற்று? உன் அன்பு இன்றோடு ஒழிந்ததா?" என்று புலம்பவைத்த பூவையே! "என் அரிய அத்தான்! தங்களுக்கப்பால் நான் உயிர் தரியேன். தங்களுக்கு

---

இன்றைய சந்தோஷத்தைக் கவனியாதே. பிறர் கொண்டாடுவதில் தலை தள்ளிப் போகாதே. நாளை கடவுளுக்குப் பாவக்கணக்கு ஒப்புவிக்க வேண்டியிருக்குமே என்பதற்கு விசாரப்படு. அதை நீ நினைத்துப் பார்த்தாயா?

முன்பே நான் சாகவேண்டும்'' என்று பலகால் சொல்லி, அச்சொற்படி உயிர் விட்ட ஒண்டொடியே!

ஃ

நீ என்னைப் பிரிந்து நோயால் துன்புற்று என்னை உடனே ஓடிவர எழுதும்போதெல்லாம் உன் அழுத்தமான அன்பின் முதிர்ச்சியால் நானின்றி உன் உயிர் போகாதென்று அடிக்கடி சொல்வதற்கேற்ப, இறக்குமுன் நான் ஆகாத கனவு காணவைத்து உன் அருகில் என்னை வரவழைத்த அன்னமே!

ஃ

கடைசியில் உன்னைக் கண்டேன். கண்டும் மனம் விண்டேன். என்னை விட்டுப் பிரிய மனம் வராமல் உன் ஆவி ஓர் இரவெல்லாம் தவித்தது. உன் கைகால்கள் சில்லிட்டன. உடம்பு அசைவற்றது. கண்கள் மறைந்தன. முகக்களை மாறிற்று. மூச்சொடுங்கியது. நீ இறந்தாய், உன்னை மயானம் கொண்டு சென்றனர். இவையெல்லாம் கண்ணாரக் கண்டும், உன் அன்பின் அளவை அறிந்தும் இன்னும் உயிர்வைத்திருக்கும் பாவியேன் நான். என்னை அருகிலழைத்து உட்காரச் சொல்லி, "என் அன்புள்ள அத்தான், என் தந்தையார் செய்த தவத்தின் முடிவாக எனக்கு இனிய கணவனாக வாய்த்தீர். என் இஷ்டப்படியெல்லாம் இன்பத்தையும் கொடுத்தீர்'' என்று சொன்ன உன் கடைசிச் சொற்களும், நீ அருமையாகப் பெற்று வளர்த்த சீதா—மரகதம்—குலசேகரன்—மனோரஞ்சினி — வேணுகோபாலன் முதலிய மக்களின் இனிய முகங்களும் என் உயிரில் இனியும் சற்று இச்சைவைக்கச் செய்கிறது. இன்று ஊற்றெனச் சொரியும் என் கண்ணீரை என் அன்பின் அறிகுறியாக ஏற்பாய்.

ஃ

ஓ என் அன்புள்ள சுந்தரீ! அன்பும், நல்லெண்ணமுமே உருவாகப் பெற்ற உன்னைப்போன்ற உத்தமிகள் இவ்வுலகெங்கும் நிறைவதாக. உன் ஆவி சொர்க்கலோகத்தில் நெடுநாள் நிற்கவும், ஒருகால் தவக்குறைவால் திரும்பிவருமாயின் என் வாழ்க்கைத் துணைவியாக மீண்டும் அமரவும் நான் வேண்டுகின்றேன்.

பெரியோர்களே! இப்பரிசுத்த ஜீவன் சாந்த நிலைமையை யடைய நீங்களும் கடவுளை வேண்டுவீர்களாக.

வேலம்பாடு } ப. சி. கோவிந்தசாமி
7-2-1915. } ராஜா.

[இதை வரைந்த இப்பெரியாரும் இப்போது இவ்வுலகிலில்லை. ப-ர்.]

---

சிலர் ஓயாமல் வாய்க்கு ஏதாவது வேலை கொடுத்துக் கொண்டேயிருப்பார்கள். சதா தாம்பூலத்தை மென்று தின்பதாயிருப்பார்கள். அது தீர்ந்ததும் சுருட்டுப்புகை குடிக்க ஆரம்பித்து விடுவார்கள். அது தீர்ந்ததும் ஏதாவது ஒரு வம்புப் பேச்சையோ வெட்டி வார்த்தையையோ தொடங்குவார்கள். அதுவும் தீர்ந்ததும் ஏதாவது பக்ஷணம் தின்ன ஆரம்பிப்பார்கள். அதுவும் தீர்ந்ததும் இலையில் புசிக்கச் செல்வார்கள். அதுவும் தீர்ந்ததுவும் பழயபடி தாம்பூலம் ஆரம்பமாகி, அதற்குப் பிறகு உள்ளதெல்லாம் தொடர்ச்சியாக வந்து முளைத்துக் கொள்ளும்.

---

பத்திராசிரியர்களுக்கு எவர்மீதும் அன்புதான். ஒவ்வொரு அன்பரையும் மகிழ்விக்கவே அவா. ஆனால் அதற்கு நேரமுமில்லை! சூழும் தொல்லைகட்கு ஓய்வுமில்லை. பாவம் கலங்கித் திகைக்கிறார்கள்.



# ஹாஸ்ய சஞ்சீவினி



கொக்கு:—மிக்க கீர்த்திவந்தரான அவரைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

குள்ளநரி:—அவருடைய அருமையைத் தெரிந்தோர் அவரை மிக உயர்வாக மதிக்கிறார்கள். அவருடைய விரோதிகள் அவருடைய பெருமையை மறைத்துக் கேவலப்படுத்த நாடுகிறார்கள். அவருடைய அருமை தெரியாதவர்கள் இகழ்ந்து பரிகசிக்கிறார்கள். அவரிலும் மேம்பட்ட கல்விமான்கள் அவரைப்பற்றி ஒரு மதிப்பான சிறு குறிப்பைத் தங்கள் மனத்தில் வைத்து அதற்கேற்ப அவரைப் புகழ்ந்து பாராட்டுகிறார்கள்.

கொக்கு:—இந்தப் புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் அவர் எப்படி நினைக்கிறார்.

குள்ளநரி:—இரண்டுக்கும் அவர் சிரிக்கிறார். திட்டுகிறவனிடத்தில் அவனுடைய அவிவேகத்திற்கு இரக்கப்படுகிறார். புகழ்பவனைப்பற்றிப் புன்னகை கொள்கிறார்.

ஃ

வினா:—நான் நடக்கவேண்டிய வழி எது?

விடை:—உன் விஷயங்களை வெளியிடாதே. ஆனால், ஊராரின் விஷயங்களைக் கிரகித்துக்கொள். எதிலும் ஒரு முக்கிய அளவுக்குத் தெரிந்துவை.

ஃ

குப்பம்மா:—அதற்குள் என் மகள் பெரிய மனுஷியாய் விட்டாளே என்ன செய்வது?

சுப்பம்மா:—பெரிய பெண் ஆகாதது போலவே எண்ணி சில வருஷங்களுக்கு உன்னிடமே வைத்துக்கொண்டு திருப்திபடு.

குப்பம்மா:—அது சரி. ஆனால், முன்போல் கலியாணத்தைப்பற்றிக் கவலைப்படாமல் இருக்க முடியாதே.

ஃ

—"நீ முன்பு அவருக்கு ஓயாமல் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தாயே? இப்பொழுது ஏன் இல்லை?"

—"மனுஷ்யர்களுடைய உண்மையான ஸ்வபாவங்கள் தெரிந்த பிறகு கடிதம் எழுதுவதும் நின்றுவிடுகிறது. நல்ல ஸ்வபாவமாயிருந்தால் கடிதங்கள் தானாகவே வளராதா?

ஃ

மாதவன்:—அவர் ஸர்க்கூட்போகும்போது மாதந்தோறும் உங்கள் வீட்டில் தங்கிச் சென்றதைப் பார்த்திருக்கிறேனே. இந்தத் தடவை வேறு தெருவில் ஏன் இறங்கினார்?

ராகவன்:—அவர்தான் குடிக்கும் பாலுக்குப் பதிலாகப் புறப்படுகையில் குழந்தைகளுக்குச் சிறு பணம் தந்து அந்தக் கணக்கு சரியாய்விட்ட

---

உண்மையான அழகு தனக்குத்தானே ஜொலிக்கும். அதற்குப் பூஷணங்கள் எதற்கு? சந்திரனின் அழகைப் பார். அவன் சிங்காரித்துக் கொண்டா இருக்கிறான்?

---

வந்தன வழிபாடுகளெல்லாம் அன்னியர்களுக்குத்தான். அன்பர்கட்கோ மனதோடு மனங்கலந்த மந்தகாஸமான புன்னகை!

தென்று எண்ணிக்கொள்வார். என் சம்பளம் குறைந்து விட்டதில் அவரே சென்ற தடவை பாலுக்குப் பணம் கொடுக்கும்படியானது. பாலுக்கும் தானே பணம் தந்து, குழந்தைகட்கும் சிறுபணம் தர எப்படி முடியுமென்று இங்கு வரவில்லையோ என்னவோ? இவரைச் சிறு பணம் தரும்படி எவரும் சொல்லவில்லை. எல்லாம் அவர் கோணல் நெஞ்சே காரணம்?

ஃ

கணவன் :—நீ ஒரு மாதத்திற்கு 20—ரூபாயில் செலவுகளை அடக்கி விட்டு என்னிடம் 30—ரூபாய் செலவானதாகக் கூறிப் பிடுங்குவாய். ஆதால் நானே வீட்டுச் செலவுகளைச் செய்கிறேன்.

மனைவி :—உங்கள் சங்கதி தெரியாதா? 30:—ரூபாயைச் செலவிட்டு விட்டு 20—ரூபாய்தான் ஆனதுபோலக் காண்பித்து உங்களை மெச்சிக் கொள்வீர்கள். அப்படி அதிக செலவு ஏற்படவேண்டாம். நானே செட்டாகச் செலவிடுகிறேன். 20—ரூபாயையே கொடுங்கள்.

ஃ

சாஸ்திரி :—என் வழக்கு தீர்ப்பு சொல்லப்படும் தினத்தில் நான் வெளியே புறப்பட்டபோது எங்கள் ஊரில் முனையிலேயே அறுத்திட்ட அடுத்த ஆத்து முண்டை எதிர்ப்பட்டாள். வழக்கும் தோல்வி யாயிற்று.

ஐயர்:—சகுனங்கள் தப்புவதில்லை. இன்று நான் வேலைக்காக ஒரு மனு எழுதிக்கொண்டு வெளியே போகையில் எதிர் ஆத்து சுமங்கலி முன்னே வந்தாள். வேலையும் கிடைத்துவிட்டது.

ராவ் :—சாஸ்திரியார் இகழ்ந்த முனையில் அறுத்த அவரது ஊர் முண்டைதான் இப்போது விதவாவிவாகம் செய்துகொண்டு சுமங்கலியாகி இங்கு எதிர் ஆத்தில் இருப்பவள். அவள் முண்டையாயிருந்து எதிர்ப்பட்டபோது சாஸ்திரியாரின் வழக்குக்குத் தோல்வி! பிறகு அவள் சுமங்கலியாகி முன்னே வந்தபோது ஐயருடைய மனுவுக்கு உடனே வேலை கிடைத்து விட்டது! விதவைகட்கு விவாகம் செய்வதில் எவ்வளவு நன்மையிருக்கிறது பார்!

ஃ

சேஷி:—ஏனம்மா இவ்விதம் தலைமயிரை யெல்லாம் கத்தரித்து விட்டாய்? ஒரு புஷ்பம்கூட வைக்க முடியாதே.

சாரதா, பி. ஏ :—கத்தரித்துக்கொண்டால்தான் நாகரீகமாயிருக்கும். பூவைக்க முடியாமற் போனாலென்ன? வாசனைத் தைலம் வேண்டியவரை தடவினால் சரியாய் விடுகிறது

சேஷி :—உங்கள் கிழப்பாட்டியைப் போல் முழுதுமே மொட்டையடித்துக் கொண்டால் இன்னும் அதிக நாகரீகமாயிருக்குமே !

ஃ

குமாரன் :—அவர் திரும்பவும் வரவில்லையே ஏன் ?

தாய் :—ஏதோ நமது வீடு தேடிப் பிரியமாய் வந்தவரை நீ அப்படித் துளைத்துத் துளைத்துப் பேசி வாட்டினால், அவர் எப்படி வருவார் ?

ஃ

கேசவன் :—நம்மையே எதா சுற்றிக்கொண்டு கிடந்த அந்தப் பயல் இப்போது கண்டாலும் ஜாடையாகப் போய் விடுகிறானே ?

வாசவன் :—அப்போது அவனுக்குக் கல்யாணமில்லை. இப்போதோ அவன் புது மாப்பிள்ளை ! அதற்குத் தகுந்தபடி நடை ஒய்யாரம் !




## கருத்தை முதலில் கண்டு கொள்.

1. பக்கத்து வீட்டுப்பெண் நமது வீட்டுக்குள் வருகிறாள். ஏன் வருகிறாள்? நமது தாயாரிடம் ஏதாவது சங்கதி சொல்ல வந்திருக்கவேண்டும்; அல்லது இரவலாக ஒரு பண்டம் பெற்றுப் போகவோ, பேசவோ வந்திருக்கவேண்டும். எதற்கோ ஒரு சங்கதிக்கு வந்திருப்பதாக முதலில் தானே தெரிந்து கொள்கிறோம்.

2. பிச்சைக்காரன் நமது வீட்டிற்கு வந்து நிற்கிறான். ஏதோ பிச்சை கேட்கவே அவன் வந்திருக்கிறானென்று அறிகிறோம். நமது வீட்டுக்கு அருகே ஒரு வண்டி வந்து நிற்கிறது; அதிலிருந்து ஒருவர் இறங்குகிறார். அவர் நம்மைப் பார்க்க வந்ததாகத் தெரிந்து கொள்ளுகிறோம். இவ்விதமே, இன்னார் இன்ன கருத்துடன் வந்திருப்பதாக முதலிலேயே ஜாடையாக அறிகிறோம்.

3. ஒரு புஸ்தகத்தில் ஒரு பாடத்தைப் படிக்கத்தொடங்குகிறோம். அந்தப் பாடம் என்ன கருத்துடன் சொல்லப்பட்டது என்பதை நாம் முதலில் அறியவேண்டும். அந்தப் பாடத்தின் கருத்தை நாம் ஊகித்து அறிந்து கொண்டால், பிறகு அந்தப் பாடம் வாசிக்கச் சுலபமாய்விடும்.

4. ஒவ்வொரு பாடத்திலும் ஒவ்வொரு கருத்து இருக்கும். கருத்து இல்லாமல் எந்தப் பாடமும் கிடையாது. "ஒருவன் செய்த மோசம்" என்று ஒரு பாடத்தை நாம் வாசிக்கிறோம். அந்தப் பாடத்தின் கருத்து என்ன? மோசக்காரர்களிடம் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும் என்பதே. இப்படியே, ஒவ்வொரு பாடத்தின் கருத்தையும் நாம் ஆராய்ந்து தெரிந்து கொள்ளவேண்டும்.

5. வாசிக்கும்போதே யோசனையுடன் வாசிக்கவேண்டும். கடின பதங்களின் அர்த்தங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். எந்தெந்த விஷயங்களை ஞாபகத்தில் வைக்கவேண்டுமோ, அவற்றையெல்லாம் மனப்பாடம் செய்யவேண்டும். எதையும் எழுதிப் படித்தால் தான் பிழையில்லாமல் எழுத முடியும். உபாத்தியாயருக்காக வாசியாமல், நம்முடைய நன்மைக்காகவே நாம் படிக்கவேண்டும்.

---

வெளியூருக்குப் புறப்படுவோன் தன்னை ஈசன் கைகளில் ஒப்புவிப்போனாகிறான். அவர் விட்டவழி. நம்பியவன் ரக்ஷிப்படையாது போவதில்லை.

6. ஒருவரின் முகத்தைப் பார்த்ததும் இன்ன கருத்துடன் வந்தவர் என்று அறிகிறோம். அப்படியே, ஒவ்வொரு பாடத்தின் கருத்தையும் தெரிந்து வாசிக்கவேண்டும். அப்போதுதான் நாம் நாம் அறிவில் தேறியவர்களாவோம். முதலில் கருத்தை யறிகிற யுத்தி நுட்பத்தில் நாம் பழகிக் கொள்ளவேண்டும். ஒரு புஸ்தகத்தையோ, ஒரு பாடத்தையோ படித்து முடித்ததும், அதன் கருத்து என்னவென்று யோசித்துப் பார்.

## பெண்களின் ஒழுக்கம்.

பெண்கள் துரிதமாக முன்னேறி வருகின்றனர். மானிட உழைப்பின் எந்தத் துறையிலும் பெண்களின் பிரபாவம் உணரப்பட்டு வருகிறது. ஆனால், ஒரு அபாயம். இவ்வாறே புருஷர்களைப்போல் ஆவதற்கு முயன்று சென்றால், பெண்கள் படிப்படியாகப் பெண்தன்மையை இழக்க நேரிட்டுவிடும்.

பெண்கள் எவ்வளவுக்கெவ்வளவு ஆண்களைப்போல் இருக்க முற்படுகின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு ஆண்களைத் தம் வசப்படுத்த முடியாமற் போகும்.

100-க்கு 100-பங்கும் பெண்களாகவே இருக்க, பெண்கள் முற்படாவிடின் அவர்கள் உண்மையில் பெண்கள் அல்லர். பெண்களுள் மிக்க புத்தியுள்ளவர்களுக்கு இந்த விஷயம் விரைவில் விளங்கும். ஆடவர்களைப்போல் இருக்க முயல்வதில் பெண்கள் தங்களுக்குரிய பிரதான வசீகர மகத்வ மருந்தின் வேகத்தை இழந்துவிடுகின்றனர். புன்னகையினால் ஆடவர்களின் மனத்தைக் கொள்ளை கொள்வதற்குப் பதில் சம்மட்டியைக் கொண்டு அடித்துத் தன் வழிப்படுத்த முடியவே முடியாது.

கணக்கிட்டுப் பார்த்தபோது தேகப் பயிற்சியிலும், வேட்டை, குஸ்தி முதலியவைகளிலும் ஈடுபட்ட பெண்களுள் நம்பிக்கையோடு காதல்கொண்டு வாழ்ந்தவர்கள் அதிகமில்லை என்று தெரிகிறது.

ஸ்ரீமதி மேளரிஸ் டேகோப்ரா.

ஒருவனை முதலில் மனம் போனவாறு வசித் துளைத்துவிட்டு, பிறகு அவனை விட்டுப் பிரியமுடியாமல் அவனோடு சேர்ந்து கொள்கின்றனர்.




# காரிகையரின் கண்ணீர்.



பெண்களைத் தலையிற்றூங்கியும்—மறுபாதியில் வைத்தும்—கலைக்கு மகளாகவும் தெய்வமாகவும்—தனத்திற் கிருப்பிடமாயும் மதித்துக் கும்பிடும் ஆண்மக்களான நாம் அவர்களையே அடிமையில் ஆழ்த்தி—சமையலறைக் கோட்டத்திற் புகுத்தி அடைத்து அடிமை வாழ்வில் வைத்திருப்பதைக் காணின் படிப்புடையார் மனம் ஏன் பொங்காது? கல்வித்திறனிலும்—பற்பல வித்வத்தன்மையிலும் உயர்ந்து திகழ்ந்த பெண்கள் நிறைந்த இவ்விந்தியா தற்போது அத்தகையினரை இழந்து பொலிவற்று நிற்பதற்குக் காரணம் நம்மனோரின் ஆணவமே யன்றோ? மிருகங்களைவிடக் கேவல அடிமையில் நம் சகோதரிகளை ஆழ்த்தி—அந்தகாரத்தில் வீழ்த்தி—கல்வித்திறனைப் போக்கி முழுமுட்டாள்களாகப் பண்ணிக் கேவலம் பிள்ளைபெறும் இயந்திரங்களாகச்செய்தது ஆண்மக்களாகிய நம்மவர்களின் இறுமாப்பும் கர்வமும்தானே? பெண்களின் வீழ்ச்சிக்கு நாமே ஊன்றுகோலாக இருந்துவிட்டு அவர்களிடத்தில் கல்வித்திறன் இல்லையென்றும்—சுதந்திரம் தருவது விபத்தேயாகுமென்றும் நீளப்பேசுவது சாதுர்யமா அல்லது மூட புத்தியா? புராதன காலத்து இந்தியப் பெண்மணிகளின் சுதந்தரத்தையும் கல்விக்களஞ்சியத்தையும் கண்டு அந்த வழியைத்தான் பின்பற்றினரோவென்று வியக்கும் வாறுயுள்ள மேனாட்டினர் ஸ்திரீகளை மதித்ததன் காரணமாக எவ்வளவோ மேன்மை நிலைக்கு வந்துவிட்டதைக் கண்டும் நம்மனோர் தமது பிழையை உணர்ந்து வெட்கித் திருத்தமடையாதிருப்பதேன்? பெண் கல்வியிலும்—பெண்களுரிமையிலும் சிரத்தை கொண்ட நம்மைப் போன்றவர்கள் தங்கள் அரும் சகோதரிகளை ஒழுக்கங் கெட்ட படித்த மடையர்களுக்குத் தந்து துன்பத்தில் ஆழ்த்துவதின் பர்பம் எந்த ஜென்மத்தில் தீரும்?

ஃ

புருடன் தன் மனைவியை உயர்வாகக் கருதும் வரையில் குடும்பமும் சீரோங்கி நிலைத்து நிற்கிறதல்லவா? தான் கொண்ட பெண் அழகில்லையென்று வெறுத்து சிவப்புத்தோல் போர்த்தி நிற்கும் தோற்பையில் மோகித்துச் சிந்தை வேறுபடுவது அறிவீனமே யன்றி வேறென்ன? கண்ணிற்பட்ட பெண்களையெல்லாம் மோகித்து ஒருவளைவிட்டு மற்றொருவளை நுகர்ந்து செல்வதாயின், மிருக இச்சையைத் தீர்த்துக்கொள்வதற்கே பெண்களைப் பிரம்மன் படைத்தான் என்று ஆண்மக்கள் எண்ணுகின்றனர் என்று ஏன் சொல்லலாகாது? இவ்விதம் கைப்பிடித்த காரிகையைவிட்டு வேறொருத்தியை நாடிச்செல்வது படித்த ஆண்மக்களிடத்தில் அதிகமாக இருக்கின்றதே யொழிய மற்றவர்பால் அவ்வளவு இல்லை.

ஃ

மனைவியைப் புருடன் அடிக்கின்ருன்; உதைக்கின்ருன்; கொடுமைகள் பல செய்கின்ருன். தான் மற்ருெரு வளை வரிப்பதற்குத் தன் இல்லாளையும் இணங்கும்படிக் கட்டாயப்படுத்துகின்ருன். கடைசியில் கொண்ட காரிகையை அடியுடன் விட்டு வேருெரு வளோடிணைந்து செல்கின்ருன். அப்போது அவளின் மனம் எவ்வாறிருக்கும்? இவ்வாறு எத்தனை பேர் நம் பக்கங்களில் திகைத்து நிற்கின்றனர்?

ஃ

புருடன் தன் மனைவியை அடித்து வதைத்துத் துன்புறுத்துவதானது அவன் தன் காலில் கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தில் இறங்குவது போலன்றி வேறில்லையே? புருடன் மனைவியை அடிப்பது பெரும் நீசத்தனம். அவன் மனைவியை அடிக்காதிருக்கும் வரையில் மனைவியின் காதற்சுவையை அனுபவிக்கின்ருன். முதன் முதலில் அவன் அடிக்க நினைத்தாலும் அவனது கை துணிந்திடாது. ஓர் முறை கையை வைத்துவிடின் பிறகு மனைவியின் காந்த சக்தியினின்றும் அவன் சிறிது விடுபடுகின்ருன். மிருக குணம் நடுவில் புக, அன்பு குறைந்து காதல் தடுமாறிட, அவளை ஒரு மரக்கட்டை யென்றே நினைக்கின்ருன். பிறகு தன் மிருக பலத்தை அடிக்கடி உபயோகிப்பதில் அவன் பின்வாங்குவதில்லை. இதன் பயனாக குடும்பம் சீர்கெட்டுச் சிதைய நேரிடுகிறது.

ஃ

மனைவிமார்களை அடிப்பதற்குப் புருடன்—மனைவியர் இருவருள் யார் காரணம்? புருடனேயன்றி வேறில்லை. மிருக பலமும் ஆத்திர புத்தியும் புருடர்களுக்கே யன்றிப் பெண்களுக்கில்லை. தன்னைத்தான் அடக்கிக்கொள்ளும் சக்தியில்லாததால் அவன் ஆத்திரக்குணம் வெளிப்படுகிறது. ஆணவமும்—தான் என்ற அகம்பாவமும் குறுக்கிட்டு அவன் பிடரியைப் பிடித்து உந்த அவன் தன் நிலை தவறுகின்ருன். மிருகபலம் உடனே தலைகாட்ட மனைவியை அடிக்கின்ருன். அந்நிலையில் அவன் மனிதனன்று; மிருகமே; மிருகத்தினுந் தாழ்ந்தவனே.

ஃ

இம் மிருகபலத்தை உபயோகிப்பதால் புருட—மனைவியர்களின் கதி என்ன ஆகின்றது? ஆண்மகனென்ற ஆணவத்தால் அவன் ஒருபடி உயர்ந்து மீசை முறுக்கி நிற்கின்ருன். புருடனுக்கு மனைவி அடங்கித்தானாக வேண்டும் என்று உறுமுகின்ருன். புருடன் செய்யும் காரியம் நியாயமா—அநியாயமா என்ற கேள்விக்கு இப்போது இடமில்லை. மனைவி புருடனுக்கு அடிமைப்பட்ட மிருகமாய் விட்டபின் புருடன், "ஜில்—ஆடு—" என்ருல் ஆடியும்,—'ஜில் — சலாம் போடு' என்ருல் போட்டும் நடக்க வேண்டியதாய் விட்டது. இருப்பினும், மனைவியர்களாக அமைந்த பெண்களுக்கு அறிவென்பது அடியுடன் மறைந்தா விட்டது? இல்லையே? அவள் தன் மனோபலத்தால் எதிர்க்க முயல்கின்ருள். புருடனின் கோபம் மீறுகிறது. கோபத்தில் அவளைத் திரணமாக மதித்துத் துன்புறுத்த முயல்கின்ருன். இனி இக்குடும்பம் உன்னத நிலை காண்பது கனவுதானே!

ஃ

---

நமது செலவிலேயே காலத்தைக் கடத்திவிட்டு, நமது தலையிலேயே பிறகு பாக்கு வெட்ட வருவோர் எத்துணை பேர்கள்!

நாள்தோறும் தன் புருடனுடைய கொடுஞ்செய்கை பலப்படினும் தன் கணவன்பால் கொண்ட காதல் குன்றுகிறதா? இல்லை. இந்த ஒப்பற்ற நிலையில்தான் நம் இந்தியப் பெண்கள் உயர்ந்து திகழ்ந்து நிற்கின்றனர். கணவனிடம்கொண்ட காதல் குன்றிடாது அவனைப் போற்றிவருதும—புருடன் மற்றவன்பால் வைத்த மோகத்தால் இவளது அருமையையும் பெருமையையும் உணர்கின்றானில்லை.

❀

'பெண்களுக்கு அடக்கம் வேண்டும்—கணவன் சொற்களுக்கு மாறு சொல்லலாகாது' என்றவையின் தற்போதைய கருத்தின் தத்துவம் அற்புதமாக மாறி நிற்கிறது. அடக்கம் என்பதற்கு அடிமைத்தனம் என்றதோர் நூதனக் கருத்தைப் புகுத்தி ஸ்திரப்படுத்தி விட்டனர். இவ்வியாக்யானம் நம்மனோரின் படிப்பின் பலன் போலும்! இவ்வபூர்வ கருத்தின்படிப் பெண்கள் புருடன் சொல்லுக்கு மாறாக ஏதும் சொல்லாது 'எடு' என்பதை எடுத்தும், 'பிடி' என்பதை பிடித்தும் நிற்கவேண்டுமாம். தனக்கு மாறுபட்ட வழியில் செலுத்த வற்புறுத்தும்போது மிருகங்கள்கூடவல்லவா எதிர்க்க முயல்கின்றன? அத்தகைய நிலைகூட நம் பெண்மணிகளுக்கு இல்லாமற் போய்விட்டது யாரிட்ட சாபமோ?

❀

அன்புள்ள ஆசிரியரே! ஒரே ஒருபக்கம் எழுத நினைத்துப் பேனா எடுக்க, ஏதேதோ நீள எழுதிவிட்டேன். இன்னமும் எவ்வளவோ மனதில் பொங்கி வருகின்றன. அவைகளை எழுதுவதாயின் பெரும் புஸ்தகமே யாகுமென்று பயப்படுகின்றேன்.

P. G. K.

## நாகரீக வீட்டு நாவிதர்கள்!

---

தற்காலத்தில் அவரவரும் தங்கள் வீட்டிலேயே க்ஷவரத்திற்கான கருவியை வாங்கி வைத்துக்கொண்டு அந்த அலகினால் நாளுக்காக க்ஷவரம் செய்துகொள்கின்றனர். க்ஷவரம் செய்தபின் ஸ்நானம் செய்வதே யில்லை. நாவிதனைத் தொட்டால் தீட்டாதலின் அதற்காக ஸ்நானமே தவிர, நாமே செய்துகொள்ளுகையில் ஏன் ஸ்நானமென்கின்றனர். முன்னோர் க்ஷவரத்தீட்டு தீருவதற்கென்று நீராடச் சொல்லவில்லை. சூக்ஷ்மமான உண்மை யாதெனில், கழிவுண்ட ரோமங்கள் சிதறி வீழ்ந்து, உண்ணும் உணவுடன் கலந்தோ, வேறுவிதமாகவோ வயிற்றுக்குள் போய் அதனால் குன்மம் முதலிய ரோகங்கள் ஏற்படாதிருத்தற்கே கூறியதாகும். ஏனெனில், ரோமம் கரைவது கிடையாதாதலின், அது குடலுக்குள் ஒட்டி சுகத்தைக் கெடுக்கும். இதனை நம் நாகரீகர்கள் உணராத அவிவேகம் என்னே!

# மஹா விகடோபதேசம்.

சீடன்:—சதாகாலமும் நம்மிடம் பணம் கொடுத்து அது வாங்கிவா, இது வாங்கிவா என்று தொந்தரை செய்வோரிட மிருந்து எப்படித் தப்புவது?

குரு:—பணத்தைப் பெற்றுக் கொள். சாமான்களை வாங்கி வராம லிருந்துவிடு. உன்னைக் கேட்டால் இதோ அதோ என்று சொல்லி நாட்களைக் கடத்திவிடு. பணம் தந்தவர்கள் கோபத்தோடு பேச வரும்போது, பல்லுபோக உதைப்பேன் ஜாக்கிரதை என்று சொல்லு. பிறகு உன்னிடம் வரவேமாட்டார்கள்.

சீடன்:—நாம் ஒருவனுக்கு எற்கெனவே கடன் கொடுத்திருக்கும் போது, மறுபடியும் கடன் கேட்க வந்தால் அந்தத் தொல்லையிலிருந்து எப்படி விலகுவது?

குரு:—என்னிடம் ஒரு காசுகூட இல்லை, மிகுந்த கஷ்டம் என்று சொல்லு. எதாவது தங்க நகைகள் இருந்தால் அடகு வைத்து வாங்கித் தருவதாகச் சொல்லு. வெள்ளி நகைகள்தான் இருக்கிறதென்றால், வந்தவரையில் பெற்று உன் வீட்டில் பத்திரப்படுத்திவிட்டு, வேறிடத்தில் வைத்துப் பணம் வாங்கியது போலவும், அதற்கு வட்டி இவ்வளவு என்றும் சொல்லிக்கொடு. முதலில் நகை வைத்து அவன் உன்னிடம் பணம் வாங்கவே வரமாட்டான். உன் கபடமான ஜாடை தெரிந்து கேட்காமலிருந்து விடுவான்.

சீடன்:—நமது வீட்டுத் துக்கத் துக்காகத் தந்தி யடித்தும், வராமலே ஒரு கார்டு எழுதிவிட்டுக் கடன் தீர்த்துக் கொள்கிறவர்களைப்பற்றி என்ன நினைப்பது?

குரு:—நினைப்பதென்ன? அவர்களுடைய போலியன்பைத் தெரிந்துகொண்டு விடு. நீயும் அவர்கள் வீட்டுச்சாவிற்கு ஒரு கார்டு வெகு துக்கமாக எழுதியனுப்பி விட்டு அவ்வளவுடன் உன் கையைத் துடைத்துக் கொண்டுவிடு. அவர்களும் தங்களைப் போன்ற சமர்த்துக்காரன்தான் நீ என்றுதெரிந்துகொண்டு விடுவார்கள். எதுவும் பதிலுக்குப் பதிலே.

சீடன்:—ஐந்நூறு ரூபாய் சம்பளமுள்ள ஒரு கனவான் நமது வீட்டிற்கு வருகிறார் என்றால் அவரை எப்படி உபசரிப்பது?

குரு:—அவரால் உனக்கு எதாவது நன்மை எற்பட்டிருந்தால், இடவசதிகள் செய்து தந்து புசிப்பு முதலிய சௌகரியங்களையும் செய். அவரால் ஒரு காசுகூட நன்மை கிடையாதென்றால், ஒரு பிக்ஷாண்டியை நீ எப்படி அலக்ஷியமாகப் பார்ப்பாயோ அப்படியே அவரையும் ஒரு சாமான்யமாக நினைத்து ஒதுங்கியிருந்து விடு. நீயும் உன் திமிரில் குறைந்தவனல்லவென்று காட்டிக்கொண்டு கம்பீரமாக நில். எட்டி பழுத்தென்ன?—ஈயாதார் வாழ்ந்தென்ன?

சீடன்:—எவரெவரை நம்மிடம் அதிகமாக நெருங்கிச் சேரவைத்துக் கொள்ளக்கூடாது?

குரு:—உன் தொழில் வியாபாரத்தின் ரகசிய சூட்சமத்தைக் கருத்தாய்

---

பொழுது விடிந்து வெகு நேரமாயும் பல் துலக்காதவன், அப்போது தனக்கு ஒருவர் கொடுக்கும் பக்ஷணத்தை, தான் இன்னும் பல் துலக்கவில்லை யென்று கூறி அதை இழந்துவிடும்படியாகிறது.

அறிய விரும்பி உன்னுடன் பல்லிளித்து நேசம் பிடித்துக் குலாவ வருகிறவனையும், உன் மனைவியிடம் அதிகமாக நெருங்கும் பந்து மித்திரர்களையும் ஜாக்கிரதையாகக் கண்வைத்துப் பார்த்து அவர்கள் நெருங்காதபடி கத்தரித்து விலக்கிவிட்டு எப்பொழுதும் விழித்த முகமாயிரு. ஏனெனில், இப்போது உன்னை அன்புடன் சுற்றி நிற்பவனே உன் சகல சங்கதிகளையும் அறிந்து பிறகு உனது பெரிய விரோதியாகி விடுவான். அவ்விதமே உன் மனைவியிடம் அதிகப்பேச்சு வைத்துக் கொள்வோரால் உன் மனைவியோ குடும்பமோ பாழ்பட்டு விடலாம். எப்போதும் எதையும் தனியே அந்தரங்கமாகச் செய். உன் இரகசியத்தை அருகிலிருந்து பிறர் காணும்படி நடவாதே. எவராவது உன் வேலைசமயத்தில் வந்தால் சட்டென்று யாவற்றையும் மூடிவிட்டு, வந்தவருக்காக வேலையை நிறுத்தியதுபோல் காண்பித்து, வெகு பிரியத்தோடு அவரிடம் பேசத்தொடங்கிவிடு. பிறகு அவர் புறப்பட்டு போனதின் மேல் மறுபடி தனிமையாய் உன் வேலையைப் பார்க்கலாம்.

சீடன் :—நமக்கு வெகுகாலம் சோறு போட்டுக் காத்த எஜமானன் நமது சம்பளப் பணத்தைத் தராமலே ஏமாற்றி விடும்போது என்ன செய்வது ?

குரு :—வெளிக்கு மஹா கோபத்துடன் கண்டிப்பாகக் கேட்டு வாங்கித் தீர்ப்பவனாக நடந்துகொள். ஆத்திரமாயுமிரு. உன்னுக்கோ பழைய அன்பு விசுவாசத்தில் சற்றும் குறையாமல் கடவுளின் முன்பு அவருக்கு இரக்கப்படுகிற குணமுள்ளவனாயிருந்து கிடைத்தவரை பெற்றுக்கொள். அவரவர்களின் துரோக பாவத்தை அவரவர்களே அனுபவிக்கட்டும்.

சீடன் :—குமாஸ்தாக்கள், வேலைக்காரர்கள் இவர்களிடம் நாம் எப்படி நடக்கவேண்டும் ?

குரு :—அவர்கள் நாய்க்குட்டிகள் மாதிரிதான். ரகசிய சங்கதிகளில் அவர்களோடு கலந்து கொள்ளாதே. தனியாய்த் தூரமாகவே வை. உன்னிடம் வேலையில் இருக்கிறவரை உன் எதிரியின் சங்கதிகளை உனக்குச் சொல்லி மிக வேண்டியவர்கள் போல் உனக்கு நடப்பார்கள். இவர்களே பிறகு உன் எதிரியிடம் வேலைக்கு அமர்ந்து விட்டாலோ உன் ரகசியங்களை யெல்லாம் உன் எதிரிக்குச் சொல்லி அவன் பக்கமாயிருந்து உனக்குப் படுகுழி தோண்டுவார்கள். உன்னிடம் பெறுகிற சம்பளத்திற்காக எந்த அக்கிரம மோசத்தையும் செய்யத் தயாராயிருக்கிற—மனஸாக்ஷியே இல்லாத—இவர்களை நீ நம்பி விடாதே. வேலையை மட்டும் வாங்கிக் கொண்டு அவர்களின் கூலியைக் கொடுத்து வெளியிலேயே ஒரு எல்லையுடன் நிறுத்திவை. எப்பொழுதும் நீ தனியே யோசித்து உன் ரகசியத்தை இவர்கள் அறியாதபடி செய்.

சீடன் :—நாம் எவ்வளவோ அன்பு வைத்து உயிருக்குயிராயிருந்த இடத்தில், திடீரென்று அவர்கள் அன்பு மாறிப்போய் நம்மை அன்னியர்களென்று நினைத்து விட்டால், அப்போது பழைய அன்பை எண்ணித் தவிக்கிற நாம் என்ன செய்வது ?

---

ஒவ்வொரு சிறிய—அல்ப—விஷயமும் அதைச் செய்யத் தொடங்கும் போது பெரிய விஷயமாகவும், அதனதன் இயற்கை சாஸ்திர நுட்பத்தை யறிந்து அதன் அழகும் ஜீவநாதவும் கெடாமல் நடத்தி முடிக்க வேண்டிய பொறுப்பை ஏற்று நிர்வகிக்க வேண்டியதாயு மிருக்கிறது.

குரு:—அவர்கள் உன்னை அன்பில் ஏமாற வைத்தது உனக்குப் பெரிதும் நன்மையே. நாளைக்கு அவர்கள் சாகும் போது நீ அவர்களின் மரணத்திற்காக அதிகமாய் வியாகூலப்பட்டுக் கொள்ளாமல் சாதாரணமாயிருந்து விடுவதற்கு அது ஒருபெரிய உதவியாகிறது. உன்னை அன்பில் ஏமாற விட்டோர் தாங்கள் செத்து மண்ணானபோது வாரிக்கொண்டுபோன லாபம் ஒன்றுமில்லையானாலும், அன்பு-என்கிற வகையில் உலக சுபாவம் இன்னின்னவாறு இருக்கிறதென்று தங்கள் செய்கையால் அவர்கள் காட்டி விட்டது உனக்கு எவ்வளவோ ஞான வெளிச்சமாகுமல்லவா! அதுவே உன் பெரிய லாபம்.

சீடன்:—நம் வீட்டிற்கு வந்திருந்து தங்கி, பிறகு ஊருக்குப் போகிறவனை எப்படி வழி யனுப்புவது?

குரு:—ஒருவன் ஊருக்குப்புறப்படுகிற சமயமே அவனிடம் பிடுங்குவதற்கு ஏற்ற காலம்! அவனை இந்திரன் சந்திரன் என்று புகழ்ந்து பேசு. அவன் பிரிவுக்குக் கண்ணீர் விட்டு மாரடிப்பதுபோல் காட்டு. அவனை ரயிலுக்குவந்து வழியனுப்ப திவான் பகதூர் வருவார், ராவ்சாகிப் வருவார், ஸர் இட்டிலி முதலியார் வருவார் என்று ஆகாசத்தில் தூக்கிவைத்துப் புகழ்ந்திடு. அதில் அவன் மயங்கிடும் சமயத்தில் அவனிடமுள்ள முக்கியமானவற்றை மெதுவாய் இனமாகக் கேட்டுப் பிடுங்கிக்கொள். உங்கள் ஞாபகமாக வைத்துக்கொள்கிறேன் என்று சொல்லியும் பிடுங்கு. அவன் ஏமாறித் தந்துவிடுவான். பிறகு அவன் ஊருக்குப் புறப்பட்டுப்போனதும் ஒரு பெரிய சனியன் தொலைந்ததென்று சந்தோஷப்படு.

சீடன்:—ரூபாய், பணம் விஷயமாய் ஏதாவது உபதேசம் செய்கிறீர்களா?

குரு:—அப்படிக் கேள் அப்பனே! எந்த சங்கதிக்கு எவரை நம்பினாலும் இந்தப் பாஷாணமாகிய பணம் சங்கதிக்குமட்டும் சுலபத்தில் எவரையும் நம்பிவிடாதே. நெருங்கிய பந்துதானே, நண்பன் தானே பக்கத்திலிருக்கிறான், பார்த்துக்கொள்வான் என்று எண்ணி உன் பணப்பையை வைத்து விட்டு அங்கு இங்கு போய்விடாதே. நீ திரும்பிவருகிற அரை நிமிஷத்திற்குள்தானே பணப்பைக்குள் இருந்த முழு ரூபாயோ, நோட்டுகளோ களவாடப்பட்டுவிடும். பணப்பை நீ கட்டி வைத்த மாதிரியே இருக்கும். பிறகு நீ திறந்துபார்க்கும்போது அதில் முழு ரூபாயோ நோட்டோ இல்லாமல் இருக்கக் காண்பாய். யார்மேல் சொல்வது? எல்லோருமே நெருங்கியவர்கள். உன் வயிற்றில் அடித்துக் கொண்டு அழுவதைத் தவிர மறுபடியும் கிடைக்கப்போவதில்லை. ஆனதால், எந்த அவசரத்திலுங்கூட பணப்பையையோ, நகைகளையோ கையோடேயே எடுத்துச் செல்.



---

ஒருவனைத் துரோகி யென்று தெரிந்த பிறகு அவனுடைய செய்கைக்காக ஒரு சமயம் இரக்கப் படலாமேயன்றி, மறுபடியும் அவனுடன் சேர மனம் சம்மதிப்பதில்லை.



இரவில் விழித்துக்கொள்பவனுக்குத் துணையாக இருக்க மற்றொருவரையும் கடவுள் விழிக்கவைத்து ஜதை சேர்க்கிறார். இறைவனுடைய அருட்பிரகாசம் எந்த சிறு சங்கதிகளுக்குங்கூட வந்து தோன்றிக்கொண்டு ஜொலிக்க வைக்கிறது.

# ஒரு வைத்தியரின் கொடூரம்.



சீதோஷ்ண விசேஷத்தாலும், காற்று நீர் முதலியவைகளின் விகற்பங்களாலும் மனிதர்களுக்கு வியாதியுண்டாகும். பிணிகளாலுண்டாகும் தீங்குகள் எல்லோருக்கும் தெரிந்தவைகள் தான். மனிதர்களுக்கு மனமும் மெய்யும் சௌக்கிய ஸ்திதியிலிருத்தலே கடவுளின் முக்கிய அருளாம். மனிதர்கள் அறிவின்மையாலும் கெட்ட நடத்தையாலும் நோய்க்கிடங் கொடுப்பார்கள். இவ்விரு காரணமுமல்லாமல் ஜன்மாந்தரங்களில் செய்த பாவங்களினாலும் வியாதிகள் நேரிடுமென்பது சிலருடைய கொள்கை. வியாதி வந்துவிட்ட காலத்தில் வைத்தியர்களின் பாடு கொண்டாட்டமாயும், பிணியாளிகளின் பாடு திண்டாட்டமாயும் விடுகிறது. வைத்தியர் கால்நடையாக நடந்து செல்லுபவரானாலும், அப்பொழுது வண்டியிலேறித்தான் வருவார். வீட்டிற்கு வந்ததற்கு வேறே பணம் தரவேண்டுமென்று சில தமிழ் வைத்தியர்கள் ஒரு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். இது ஆங்கில டாக்டர்களைப் பார்த்துக் கற்றுக் கொண்டதுபோலும். சில வைத்தியர்கள் பிணி தொலைவதற்குள் 2, 3, 4—என்று ஒரு இருபது ரூபாய்க்கு மேலாகவே சிறுகச் சிறுகப் பறித்துவிட்டு, வியாதி தீர்ந்தபிறகும் வேறே பணம் கேட்டுப் பெற்று, என்ன இந்த ஐந்து ரூபாய்க்குத் தானா இத்தனை பாடுபட்டேன் என்பார்கள். முன்னே பல சில்லரையில் வாங்கிய ரூபாய்கள் அவர்களின் ஞாபகத்துக்கு வராது போலும்! இது பணக்காரர்களிடத்தில் நடக்கும் சங்கதி. ஏழைகளிடத்திலோ ஏதாவது உதவாத ஒரு மருந்தைக் கொடுத்துத் தொலைப்பார்கள். பணம் கொண்டுவந்தால் தான் சரியான மருந்து தருவேனென்பார்கள். சிலர் தர்மவைத்தியம் என்று விளம்பரம் செய்துகொள்வார்கள். இதில்சில வீண்பகட்டு. இந்தவகையில் பெரிய நோயாளிகளைப் பிடிக்கவும், தமது பெயர் விளம்பரமாவதற்காகவுமே வீசும் மாயவலை இது. அதிலும் யூநாநி வைத்தியர்களாயிருந்தால், அவர்களின் வீடு கோஷாவானதால் வெளியிலிருந்தே பலமுறை கூவி அழைக்கவேண்டும். ஒரு பிணியாளி காசு இல்லாதவனாக இருந்தான். அவனுக்கு ஒரு வைத்தியர் வீட்டுக்குள்ளிருந்துகொண்டே இல்லையென்று சொல்லிவிட்டார். அவ்விதம் கூறியும் அவன் சற்றுநேரம் ஒரு மூலையில் மறைவாக ஒளிந்திருந்தான். தன்னை வீட்டில் இல்லையென்ற யூநாநி பண்டிதரோ பிறகு வீட்டிற்குள்ளிருந்து ஆடம்பரமாய் வெளியே வந்தார். பிணியாளி அவர்முன் சென்று சலாம் செய்யவே, வெட்கிப்போய் வாருங்கள் வாருங்கள் என்று கூறிப் பிறகு வியாதிக்குத் தகுந்த மருந்து இனி செய்ய வேண்டுமென்று சொல்லி அனுப்பிவிட்டார். இவ்விதமும் சில வைத்தியர்களுண்டு. இத்தகையோரிடமும் பணம் தராமலே ஏமாற்றிப் பறிக்கும் சாமர்த்தியசாலிகளும் இல்லாமலில்லை.

ஃ

---

ஜாடைச் சொற்களும், தப்பான எண்ணங்களும் செய்யும் வேதனையளவு உண்மையான தூஷணங்கள் செய்வதில்லை.

கள்ளிக்கோட்டைக்கு சமீபமான ஒரு கிராமத்தில் தனவானாகிய ஒரு நம்பூரி பிராமணன் இருந்தான். அவன் மிகவும் பெயர்போன வைத்தியனாதலால், அவனிடத்தில் சிறு பிராயமுதல் வயிற்று நோயால் வருந்திக் கொண்டிருந்த ஏழைப் பிராமணன் ஒருவன் போய்த் தன் வியாதியைத் தீர்க்கவேண்டுமென்று கேட்க, வைத்தியன் ஆகட்டும் இரும் என்றான். அந்தப் பிராமணன் தினந்தோறும் உபாதானம் வாங்கித் தன் கையினால் வைத்தியன் வீட்டில் சமையல் செய்துகொள்வான். ஆனால், சாப்பிட உட்கார்ந்து ஒருபிடி உட்கொள்ளுவதற்கு முன் ஒன்பது தடவை ஓக்காளித்து வயிற்று வலியினால் புரண்டழுவான். இதைத் தினந்தோறும் வைத்தியனும் பார்த்துவந்தான். இப்படியாக ஒரு வருஷகாலம் சென்ற பின்பு அந்த ஊரிலுள்ளவர்கள் வயிற்றுவலிப் பிராமணனைப் பார்த்து; "ஓய் பிராமணா! நீர் எத்தனை வருஷகாலம் காத்திருந்தாலும் பாவி வைத்தியன் உமக்கு மருந்து கொடான். இதற்காக நாம் ஒரு யுக்தி செய்வோம். வைத்தியனுடைய பிதாவின் வருஷச் சடங்கு இன்னும் பத்துநாளில் வரப்போகிறது. அன்றைய தினத்தில் சடங்குக்காக அவனால் பிராமணார்த்தமாக வரிக்கப்படுபவர்களெல்லோரும் கட்டுப்பாடாய் அசலூர்களுக்குப் போய் விடுகிறோம். அப்போது உம்முடைய வயிற்று நோவுக்கு மருந்துகொடுத்து உம்மையே பிராமணனாக வரிப்பான். போஜனஞ் செய்தபின்பு அந்த மருந்தை முறிக்கிறதற்காக ஏதாவது வஞ்சனையாய்க் கொடுக்கவருவான். அதை வாங்கித் தின்னாமல் அப்புறப் பட்டுவிடுமென்று சொன்னார்கள்.

ஃ

பிறகு வைத்தியனின் பிதாவினுடைய வருஷச் சடங்கு தினமும் வந்தது. வைத்தியன் தன் பிதாவின் திவஸதிதியில் ஊரில் ஒருவரும் இல்லாதிருக்கக்கண்டு, வயிற்றுவலிப் பிராமணனை வரிக்க, அந்தப் பிராமணன் நான் அரை வயிற்றுக்குக்கூடச் சாப்பிடாமலிருப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கிறீரே; நான் சாப்பிடாவிட்டால் உம்முடைய காரியம் நஷ்டமாமே யென்று சொல்ல, வைத்தியன் அப்போது நான் ஒரு உபாயம் சொல்லுவேனென்று சொன்னான். பிறகு பிராமணன் சாப்பிடுவதற்கு முன் வைத்தியன் தன் வீட்டின் பின்பக்கத்திற்கு ஓடி ஒரு பச்சிலை பறித்து வந்து அதின் சாற்றைப் பிராமணன் இலையிலிட்டிருக்கும் சாதத்தில் பிழிந்து அவனைச் சாப்பிடும்படி சொன்னான். பிராமணன் வயிற்று வலி நீங்கிப் பசிதீர உண்டெழுந்தான். பின்பு வைத்தியன் முறிவு பதார்த்தம் கலந்த ஒரு சிற்றுண்டியை வெகு பிரியமாய்க் கொடுக்கவர, பிராமணன் அந்த வஞ்சகத்தை யறிந்து அதை வேண்டாமென்று மறுத்துவிட்டுத் தன் ஊரையடைந்து சுகமாய் வாழ்ந்திருந்தான். ஃ

இப்படிப்பட்ட கொடிய வைத்தியர்கள் சிலரானாலும், மூட வைத்தியர்கள் அவரினும் ஆயிரமடங்காவார். நமது வைத்திய சாஸ்திரத்துக்கு வந்த இழிவுபோல் வேறொரு சாஸ்திரத்துக்கும் வரவில்லை.

---

சென்னையை யடுத்த காடுகளில் இரவில் மான்கள் சுற்றித்திரிகின்றனவாம். பகலில் தென்படுவதில்லையாம். அவற்றை இரவில் வேட்டையாடிக் கொன்று மாமிஸ ருசி காண்கின்றனராம். அழகிய மான்களை உயிருடன் பிடிக்க இவர்களால் முடியவில்லையாம்.

# ஸர் ஐஸாக் நியூட்டன்.



ஏறக்குறைய இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னே இங்கிலாந்தில் லிங்கன்ஷயர் என்கிற மாகாணத்தில் ஒரு பண்டிதர் இருந்தார். அவருடைய தோற்றம் சிறு பிராயத்திலேயே யாவரும் பார்த்து விரும்பத்தக்கதாக வெகு கம்பீரமாயிருந்தது. அவருக்குத் தேக வலிமை அதிகமாய் இல்லையென்றாலும் புத்தி வலிமை அதிகம். ஆயினும், அவர் பள்ளிக்கூடத்தில் மிகவும் சோம்பேறியாய்த் தனக்குச் சமவயதான பிள்ளைகளுக்குக் கீழ்ப்பட்டவராகவே இருந்தார். அவருக்கு ஐஸாக் நியூடன் என்று பெயர். அவர் பனிரண்டு வயதான பிறகு கிராந்தன் (Granthan) என்னுமிடத்திலுள்ள பெரிய பாடசாலையில் படிப்பிக்கப்பட்டார். அங்கே படிக்கிற காலத்தில் அவர் ஒரு மருந்துக் கடைக்காரன் வீட்டில் குடியிருந்தார். அப்போது அவரை அறிந்தவர்கள் எல்லோரும், "இவன் முழு மூடன், இவனுக்கு ஒன்றுமே தெரியாது" என்று இகழ்ந்து பேசினார்கள். அக்காலத்தில் மட்டுமல்ல, இக்காலத்தில் கூட எத்தனையோ கல்விமான்களை முட்டாள்களாகவும், இகழ்ச்சிக்குரிய கேவலஸ்தர்களாகவும் பேசித் தாழ்த்திவிட எவ்வளவோ சுற்றத்தார்களும் நண்பர்களும் பிறரும் காத்திருக்கிறார்கள். ஆதலின், நியூடனைத் தாழ்த்திப் பேசியது ஒரு அதிசயமல்ல. நியூடன் ஒருநாள் கூடப் பாடசாலையில் புத்தியுள்ளவன்தானென்று ஒருவராலும் புகழப்பட்டதில்லை. ஆதலால், கூடப்படித்த பிள்ளைகள்கூட அவரை இகழ்ந்துபேசி நிந்திக்கத் தலைப்பட்டார்கள்.

ஃ

ஒருநாள் அவருக்கு மேலேயிருந்த மாணாக்கன் ஒருவன் அவரை நன்றாய் உதைத்தான். அவன் அப்படி உதைக்கவொட்டாமல் தன்னைக் காத்துக்கொள்ளத்தக்க வலிமை அவருக்கு இல்லை. அவருக்கு வலிமை இல்லாமற்போனதே அவருக்கும் உலகத்திற்கும் மிகுந்த நன்மையாயிற்று. இல்லாவிட்டால் தன்னை உதைத்தவனைத் தாமும் எதிரே உதைத்துவிட்டு அவர் அவ்வளவோடு திருப்தியடைந்து போயிருப்பார்; யாவரும் அவருடைய ஆராய்ச்சித்திறத்தால் உண்டான நன்மையை யெல்லாம் இழந்துபோய் இருப்பார்கள். தனக்கு அவ்விதமாய் அவமானம் செய்தவனைத் தான் தன் தேகவலிமையைக் கொண்டு ஒன்றும் செய்யக்கூடாமற் போகவே, அவர் தன்னை அப்படி மானபங்கப்படுத்தின பிள்ளையைக் காட்டிலும் தான் படிப்பில் அதிகரித்து, அவனுக்கு மேலேபோய், அவன் கொழுப்பை யடக்கவேண்டுமென்று உறுதியாய்த் தீர்மானித்தார். இந்தத் தீர்மானம் அவர் உதைப்பட்ட அவமானத்திலிருந்தும் உண்டானதாதலின், பிறர்செய்யும் அவமானத்திலிருந்துங்கூட, ஒரு புதுவிழிப்பும், எச்சரிக்கைப் புத்தியும், நூதன யோசனையுங்கூட நமக்கு உண்டாகும்படியாயிருக்கலாம். எதுவும் நமது நன்

மைக்கே. நேருவன யாவும் நம் நலத்திற்கே. ஃ

பிறர் அதிசயப்படும்படியாகத் தான் உயரவேண்டுமென்று முயல்வது நியாயமானதுதான். ஆனால், பிறரை மானபங்கப்படுத்திக் களிப்படையவேண்டுமென்று நினைப்பது மிகவும் பிசகானது. பள்ளிக்கூடத்தில் தன்னை உதைத்தபிள்ளையைத்திருப்பி உதைக்கும்படியான வலிமை நியூடனுக்கு இருந்திருக்குமேயானால், அவருக்கும் அதே மாதிரியாக பதிலுக்குப் பதில் புரட்டி உதைத்து விடவேண்டுமென்ற எண்ணமே உண்டாகியிருக்கும். ஆனால், நியூடனிடத்தில் நாம் கண்டதென்ன? பதிலுக்குப் பதில் அவமதிக்க வேண்டுமென்ற இழிய சிந்தையை அவர் கொள்ளவில்லை. என்னவோ துஷ்டப்பையன் உதைத்தான் என்று மட்டும் எண்ணி அவ்வளவுடன் அதை மறந்து விட்டு, அவனுக்கு மேற்பட்ட ஸ்தானத்தில் தன்னை இருத்திக்கொண்டு திருப்திபட எண்ணினார். அவ்விதமே மேன்மேலும் நியூடன் விசேஷமாய்க் கல்வி கற்றுப் பாடசாலைப் பிள்ளைகளுக்கெல்லாம் தாமே தலைவராகி இருந்த காலத்தில், அவர் மற்ற பிள்ளைகளையெல்லாம் மிகவும் பக்ஷமாகவே நடத்தினா ரென்னும் அறிகிறோம். அத்துடன் தம்முடன் இருந்த பிள்ளைகளுக்கு வெகு நேர்த்தியான காற்றாடிகள் செய்துகொடுத்து விளையாட்டுத் தோழராகவும் நடந்துகொண்டது அவரது பெருந்தன்மயான குணங்கட்கு ஒரு உதாரணமாகும்.

ஃ

நியூடனின் சாதாரணவிளையாட்டுகளிலுங்கூடப் பெரிய கருத்துகள் அடங்கியிருந்தன. கடுதாசியினால் விளக்குக்கூடுசெய்து விளக்கேற்றி அதைப் பனிக்காலத்துக் காலைவேளைகளில் கையிற் பிடித்துக்கொண்டு போவார். வாள், சம்மட்டி, கோடாலி முதலிய ஆயுதங்களை வாங்கி அவைகளைத் தகுந்தபடி கையாள வெகு சீக்கிரத்திலேயே கற்றுக்கொண்டார். ஒரு மனிதன் உள்ளே உட்கார்ந்து அவன் தானே ஓட்டிக்கொள்ளும்படியாக ஒரு வண்டியைச் செய்தார். தண்ணீர் வீழ்ந்து, அதனால் காலவளவு சரியாய் ஏற்படும்படியாகக் கடிகாரயந்திரமொன்று செய்தார். வழியோரத்தில் சில வேலைக்காரர்கள் ஒருவகை விசித்திரமான காற்றுயந்திரம் செய்துகொண்டிருக்கக் கண்டு, தாமும் அதேமாதிரி சிறிதாக ஒரு யந்திரம் செய்து அதைத் தாம் குடியிருந்த வீட்டின்மேல் கட்டிவைத்தார். அந்த யந்திரத்தை ஓட்டும்படியாக அதற்குள் ஒரு எலியைப் பிடித்துவிட்டு அதற்கு இரையாக மாவையும் போட்டுவந்தார். அந்த எலிக்கு யந்திரம் ஓட்டி என்று பெயரிட்டார். இவை யாவும் சிறுபருவ விளையாடலின் மகிழ்ச்சியேயாயினும் இவற்றினுள் எத்துணைக் கருத்துகள் நிறைந்துள்ளன பாருங்கள்! நியூடன் இருந்த அறைச் சுவரில் எங்கே பார்த்தாலும் கணித விஷயங்களே எழுதப்பட்டிருக்கும். நமது கண்ணுக்குத் தோன்றுகிறபடி சூரியனுடைய கதியையும் நன்றாய்க் குறித்துக் காட்டினார். அங்கங்கே நடுவில் ஆணிகளைக்கொண்டு அரைமணி ஒரு மணிகளின் தூரத்தைக்கூடத் தெளிவாகக் குறிப்பித்தார்.

ஃ

நியூடனுக்குப் பதினைந்து வயதானபோது அவருடைய தாயார் தன் வீட்டு வேலைகளுக்கு உதவியாய் அவரைப் பாடசாலைக்குப் போகவொட்டாமல் வீட்டிலேயே வைத்துக் கொண்டாள். பயிர்த்தொழில் முத

லிய குடியானவன் வேலைக்கு அவர் சிறிதும் தகாதவர். அப்படிப்பட்ட வேலைகளில் அவருடைய புத்தி நுழைவதேயில்லை. கிராந்தன் என்கிற ஊரிலே அவன் சான்தப்பாமல் தியூடனைத் தன்வீட்டு விளைவுகளைவிற்று வீட்டுக்குத் தேவையான பொருள் வாங்கிவரும்படிக் கடைக்கு அனுப்புவான். அப்போது நம்பிக்கையான வேலைக்காரனும் ஒருவன் அவரோடுகூடப் போவான். அவர் அந்த வேலைக்காரனையே கடையிலுள்ள வேலைகளை எல்லாம் பார்த்துவரும்படி விட்டுத் தான் தனக்கு வழக்கமான ஒரு வீட்டிலேபோய் உட்கார்ந்து பொழுது போமளவும் படித்துக் கொண்டிருப்பார். ஒவ்வொரு வேளையில் ஒருவீட்டுக்கும் போகாமல் எங்கேயாவது ஒரு வேலியோரத்தில் உட்கார்ந்து படித்துக்கொண்டு, கடைத்தெருவுக்குப் போன வேலைக்காரன் திரும்பிவருமளவும் அங்கேயே காத்திருப்பதுமுண்டு. புலங்களில் இருந்தாலும் அவர்செய்கிற காரியம் இப்படித்தான். யாதேனும் ஒரு புஸ்தகம் படித்தவாறிருப்பதும், ஏதாவது ஒரு புதுமாதிரி யோசனைசெய்தபடியாகக் கிடப்பதும், தானே ஏற்படுத்திய ஒரு ஜலயந்திரத்தை உற்றுப்பார்த்துக்கொண்டிருப்பதும், சமீபத்தில் எங்கேயாவது ஆற்றோரங்களில் உள்ள நுரைகளை எடுத்துக் காற்றில்விட்டு விளையாடுவதும் ஆகிய இப்படிப்பட்டவைகளே அவருடைய புத்திக்குக் காரியமாயிருந்தன. ஒரு ஆடு ஒரு மூலையில் ஓடிப்போனாலும், ஒரு மாடு வந்து பயிரைமேய்ந்து நெல்லைத்தின்றாலும், எது எக்கேடு கெட்டுப் போனாலுங் கூட ஒன்றுமே அவர் கண்களுக்குத் தோன்றுவதில்லை. அவற்றைக் கவனிக்க அவர் பிறக்கவில்லை.

(மறுசஞ்சிகையில் முடிவு.)

## தன்னதிலுள்ள சிரத்தை மற்றதிலில்லை.



ஒரு ஆசிரியர் தமது சொந்த விஷயத்தைத் தமது பத்திரிகையில் வெகு முக்கிய சங்கதியாக எண்ணி எழுதுகிறார். வேறொரு ஆசிரியர் தமது சுற்றுப் பிரயாணத்தைப் பற்றி எழுதுகிறார். இவ்விரண்டு விஷயங்களையும் இன்னொரு பத்திராசிரியருக்கு அவரது பத்திரிகையில் பிரசுரிக்க அனுப்பின், அவர் அதை வீண் விஷயமென்று தமது பத்திரிகையில் வெளியிடாமல் நிறுத்தி விடவும் கூடும். ஒருவருக்கு அவசியமாகப் படுவது மற்றொருவருக்கு அனாவசியமாகத் தோன்றுகிறது. தன் சங்கதிகள் தனக்கு முக்கியமாகப் படுவதுபோல் பிறர் சங்கதிகள் தனக்குப் பிரதானமாய்த் தோன்றுவதில்லை. தபாற்காரனிடம் எவ்வளவோ கடிதங்கள் இருப்பினும், தன் கடிதத்தை அவனிடமிருந்து பெறும் சிரத்தையைப் போல் மற்றவர்களின் கடிதத்தைப் பார்ப்பதில்லை.




# பர்மிய நாட்டுப் பாவையர்.



கீழ் நாட்டில் பொதுவாகப் பாவையர் நிலை பழுதுபட்டுக் கிடப்பினும், பர்மாவில் மாத்திரம் அவர்களது நிலை மாண்புற்றிருக்கிறது. இந்த நாட்டில் குடும்பத்தின் தலைவியும் பெண்ணே; குடும்பத்தைப் பேணுவதும் பெண்ணே; வருந்தியுழைத்து ஊதியம் ஈட்டி சோம்பித்திரியும் கணவனென்பவனைக் காப்பதும் பெண்ணே.

ஃ

இந்த நாட்டில் ஸ்திரீயே எங்கும் சர்வாதிகாரி. பெரிய வர்த்தகத்தை நிர்வகித்து நடத்துவதும் அவளே. கடைகளுக்குச் சென்றால், அவ்விடம் முதலாளி ஸ்தானம் வஹிப்பதும் அவளே. கோயிலுக்குச் சென்றால், அவ்விடமும் அவள் அதிகாரமே. லக்ஷக்கணக்கான ரூபாய் பெறுமான முன்ன அணிகளையும், ஆபரணங்களையும், நவமணிகளையும், வைத்து வியாபாரம் செய்யும் பெரும் வர்த்தக ஸ்தலத்துக்குச்சொந்தக்காரியும் ஸ்திரீயே. அந்த வியாபாரத்தைத் திறம்பட நடத்துவதும் நங்கையரே. வந்தவர்களிடத்தில் நகைகளைக் காட்டி நயமாகப்பேசி, பேரம் செய்வதும் பெண்களே. விற்ற அணிகளுக்கு அழகாகக் கணக்கு எழுதும் குமாஸ்தாக்களும் இளமங்கையரே. இருப்புப்பாதை நிலயங்களில் டிக்கெட் கொடுப்பவரும் அவர்களே. கம்பெனிகளில் சுருக்கெழுத்து (Short hand) எழுதி அதை டைப் அடிப்பதும் அவர்களே. உண்மையாகக் கூறுமிடத்து பெரும் வியாபாரம் முதல் கூடைகளில் வைத்து விற்பனை செய்யும் சில்லரை வியாபாரம் ஈறாகவுள்ள சகல வர்த்தகமும் இந்த நாட்டில் பாவையர் வசத்தில்தானிருக்கிறது எனக் கூறிவிடலாம். இஃதன்றி, பர்மியப் பாவையர் அனைவரும் படித்தவர்கள். நகருக்கு வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள கிராமத்திலுள்ள பெண்ணும் படித்தவளாகவே யிருப்பாள்.

ஃ

பர்மாவில் கணவன் ஸ்தானத்தை வஹிக்கும் ஆடவனின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். அவன் உண்டிக்கென என்றும் உழைப்பதேயில்லை. அழகிய பட்டாடைகள் ஆடம்பரமாக அணிந்து, பகல் முழுதும் சோம்பித்திரிந்து பொழுது சாய்ந்ததும் வீட்டுக்கு வந்துவிடுவான். வேலையொன்றும் இல்லாததால் எப்பொழுதும் சுருட்டைப் பிடித்துக்கொண்டே காலத்தைக் கழிப்பான். அநேகமாக ஆடவ

னொருவன் இரண்டு மூன்று கன்னிகைகளுக்குக் கணவனாயிருப்பான்.

ஃ

பொருளை ஈட்டுவது பெண்களே யாகலான், ஒருத்தி அவனுக்கு உணவளிப்பாள். மற்றொருத்தி உடையளிப்பாள். பிறிதொருத்தி பேணிப் பணமளிப்பாள். இவ்வாறு ஆடவனும், மாறிமாறி இஷ்டமான மனைவியிடத்தில் இசைந்திருப்பான்.

ஃ

பர்மாவில் மணம் என்பதற்கும் மதம் என்பதற்கும் சம்பந்தமே கிடையாது. மணம் முற்றிலும் லௌகிக விஷயமே. கலியாணச் சடங்கென்று அங்கு ஒன்றும் நிகழ்வது கிடையாது. உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் அளிக்கப்படும் விருந்தொன்றைத் தவிர மணத்துக்குகந்த சடங்கொன்றும் அங்கு நடைபெறுவதில்லை.

ஃ

ஒரு மடமங்கை, தன் மனதுக்குகந்த இளைஞனை நேசித்து, அந்நேசத்துக்குப் பெற்றோர் சம்மதம் பெற முடியாதென்று கண்டால், அவ்விருவரும் ஊரைவிட்டு உடனே ஓடிவிடுவர். இரண்டொரு நாள் அருகிலுள்ள வனமொன்றில் வாசஞ்செய்து விட்டு வீட்டுக்குத் திரும்பிவிடுவர். இவ்விதம் நிகழ்ந்து விடுமாயின், பின்னர் பெற்றோர் ஒன்றும் பேசார். உடனே மணம் நடந்ததற்கறிகுறியாகப் பெரும் விருந்தொன்று நடக்கும். கலியாண மானதற்கு அறிகுறியாக மணமகனும் மணமகளும் ஓரே உண்கலத்திலிருந்து உணவெடுத்து உண்பர். அஃதொன்றே அவ்விருவரையும் சட்ட பூர்வமாய் மனைவியும் மணாளனுமாக்கப் போதுமானது.

ஃ

கணவனும் மனைவியும் கருத்தொருமித்து, காலங் கடத்துவது கஷ்டமெனக் கண்டால், கல்யாண பந்தத்தினின்று நீங்கிக்கொள்வதும், அங்கு கஷ்டமான காரியமில்லை. முதலாவதாக, உள்ள விஷயங்களை ஊர்ப் பெரியார்களிடத்தில், கணவனும் மனைவியுமாய்ப் போய்ச் சொல்லிக்கொள்வார்கள். அப்பெரியோரும் இருவர்தம் சொல்லையும் கேட்டு, ஒத்துப்போக மார்க்கமுளதோ என ஆராய்வர். அப்படி இருக்குமேல் ஒத்துப்போகக் கட்டளையிடுவர். இன்றேல் இருவரும் பிரிந்து விடுவர். மணத்தின் பிணைப்பால் மக்களிருப்பரேல், அவர்களை மனைவியே வைத்துக் கொள்வாள். கணவனோ அவளை விடுத்து, வேறொருத்தியைத் தனக்கு மனைவியாக்கிக்கொண்டு கவலையின்றிக் காலத்தைக் கழிப்பான். இவ்வளவு சுலபமாக புருடன் பெண்சாதியையும், பெண்சாதி புருடனையும் தள்ளி விடலாமாயினும், இச்சம்பவம் அதிகமாக இந்நாட்டில் நிகழ்வதில்லை.

ஃ

பர்மியப் பாவையர் அழகே உருவெடுத்தவர். ஆழ்ந்து கருத்த விழிகளும், உயர்ந்து, பிறையை நிகர்த்த நுதலும், வாரி வகிர்ந்து உச்சியில் முடித்த கூந்தலும், மதியை நிகர்த்த

---

வெளியூர்வாசியின் சொல்:—அது வாங்கவேண்டும்—இது வாங்க வேண்டும் என்பேன் வெகு தீனமாக. அதற்கு ஜாப்தாவும் இருக்கும் மிக விரிவாக. பிறகோ எதுவும் வாங்கேன் கடைசியாக. ஏன் எனிலோ பணமில்லாமையே காரணமாக.

முகமும், அவளது சுபில நிறமேனிக்கு அழகு செய்வன. அவளது பவளச் செவ்வாயில் விளங்கும் பற்களோ முத்தைப் பழிக்கும் பண்புடையன. அவள் அதிகமாக ஆபரணங்கள் அணிவதில்லை எனினும், கழுத்தில் ஒரு பொன் ஹாரமும், கைகளில் பொன்வளையல்களும் அவளுக்கு அணிகளாக அமைவன. ஆனால் நாற்பது வயதுக்கு மேற்பட்ட நாரியர் எவ்வித நகைகளையும் அணிவதேயில்லை. தாம் தரித்திருந்த அணிகளை எடுத்து குடும்பத்தில் தம்மினும் இளமையாயிருக்கும் பெண்களுக்குப் பரிசாக வழங்கிவிடுவர்.

ஃ

பர்மாவுக்குச் செல்லும் வாலிபர் பலர் அந்நாட்டுமங்கையரின் அழகைக் கண்டு மயங்கி விடுகின்றனர். கலியாணமான ஐரோப்பியர்கூட இந் நங்கையரின் நட்பைப் பெரிதும் விரும்புகின்றனர். பர்மிய நாட்டுப் பெண்கள் கள்ளங் கபடமற்றவர். அன்னியர் சொல்லுகிற அனைத்தையும் நம்பி எளிதில் அவர்கள் வசமாகின்றனர். அன்றியும் ஆடம்பரத்தை விரும்பும் அணங்குகள் ஐரோப்பிய ஆடவர் உறவைப் பெரிதும் நாடி இன்புறுகின்றனர்.

ஃ

பொதுவாகப் பர்மியப் பெண்கள் படித்தவர்கள். அவர்கள் ஆடல் பாடல் மற்றுமுள்ள களியாட்டங்களிலும் மிக்க விருப்பங் கொண்டவர்கள். இன்பமே வரினும், அன்றித் துன்பமே வரினும், பர்மியப்பாவை எப்பொழுதும் உத்ஸாகமாகவேயிருப்பாள்.

ஃ

ஆடவர், மகளிர், பாலர் ஆகிய அனைவரும் இடையறாது புகைச் சுருட்டை உபயோகிப்பர். அவர்கள் உபயோகிக்கும் சுருட்டு நீளத்தில் 18-அங்குலமும், சுற்றளவில் சுமார் ஓரங்குலமும் உளது. புகையிலையைக் கொண்டே இச்சுருட்டு செய்திருக்கப்படுமானால், மக்களின் வாழ்க்கையை மாய்க்க இப்பழக்கமொன்றே போதுமானது. ஏனெனின், பர்மியப் புகையிலை அவ்வளவு காரமானது. ஆகையினால், இச்சுருட்டில் புகையிலையைவிட குற்றமற்ற மூலிகைகளே அதிகமாகக் கலக்கப்பட்டிருக்கின்றன. ஃ

சமூகத்தில் அதிகார ஸ்தானம் பெற்றவள் பெண்ணே. பெண்கள் எவ்விடத்திற்கும் தயக்கமின்றித் தனிமையாய்ப் போவார், அவர்களுக்கு எவரும் துணை வேண்டியதில்லை. விளையாட்டுகள் எல்லாவற்றிலும் இருபாலாரும் பங்கெடுத்துக் கொள்வர். இப்படி ஆண்களும் பெண்களும் நெருங்கி நேசித்துப் பழகினும், இங்கு அதிகமாக ஒழுக்கத்துக்கு இழுக்கேற்படுவதில்லை. பர்மியப்பெண் ஒழுக்கமற்றவள் எனப்பாரிலுள்ளோர் பகர்வர். அது உண்மையன்று. பர்மியப் பாவையர் தம் கணவரிடத்தில் மட்டற்ற காதல் கொண்டவர் என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை. ஃ

பர்மியர் அனைவரும் புத்த சமயத்தை அவலம்பித்தவர். சமூகத்தில் இவ்விதஉயர்ந்த அந்தஸ்தை ஸ்திரீகள் வஹிப்பதற்கு மூலகாரணமாக இருந்து இலங்குவதும் அப்புத்த சமயக் கொள்கைகளேயாகும்.

V. பசுபதி.

---

பணம் திரட்டுவதிலேயே கண்ணோட்ட முள்ளவன் மதுவையும் மற்ற விபசார தீச்செயல்களையும் விரும்பமாட்டான். இலவசத்தில் வரின் ஒருகால் சுவைப்பனோ யாதோ!

# சென்றமாதம்

**மகாத்மாவின் மா பெருந் தியாகம் :—**

சென்ற செப்டம்பர் மாதம் 20-ம் தேதி இந்தியாவின் சரித்திரத்தில் மிரு புனிதமும் பிரசித்தியும் கொண்டதாகும். வகுப்புப் பிரசினைத் தீர்ப்பில் அரசினர் தாழ்த்தப்பட்டோருக்குத் தனித்தொகுதியும், தனிப்பட்ட சுதந்திரமும் தந்து விட்டதில், அது தாழ்த்தப்பட்டோருக்கு ஒரு நன்மை போலத் தோற்றினும், அவர்களையும் ஹிந்துக்களையும் எந்த நாளைக்கும் பிரிந்து வேறு வேறாகி விடும்படி செய்யக் கூடியதாகி விட்டது. தாயையும் பிள்ளையையும் பிரிப்பது போலுமாகி விட்டது. 100-ல் 68-பேர் ஹிந்துக்களாக இருப்பதிலே தாழ்த்தப்பட்டோரும் நீங்குவதில் 15-பங்கு போய்விட்டால், மதிப்பு வாய்ந்த ஹிந்து ஸமூகமே மிக்க பல ஹீனமும் கேவலமுமாகிவிடும். இது ஹிந்து ஸமூகத்திற்கும் தாழ்த்தப்பட்டோரின் ஸமூகத்திற்கும பெரும் பாதகம் விளைக்கு மென்பதை யுணர்ந்த மகாத்மா இவ்விதம் பிரித்ததை அரசினர் நீக்கும் வரை தாம் பட்டினி கிடந்து உயிர் விடுவதாகக் கூறி, அவ்விதமே செப்டம்பர் மாதம் 20-ம் தேதி முதல் 26-ம் தேதி மாலை நாலரைமணி வரையில் சிறிது ஜலம் மட்டுமே அருந்தியவாறு உபவாசமாயிருந்தார். மகாத்மாஜியின் பிராணன் தத்தளித்துக்கொண்டு எந்த நிமிஷமோ என்னும்படி இருந்தது. இதனிடையே டாக்டர் அம்பேத்கார், பண்டித மாளவியாஜி முதலானோர் ஒன்றுகூடி சமரஸமான ஒரு ஒப்பந்தம் தயாரித்து மகாத்மாஜியும் அதற்கு ஒப்புக்கொண்டபின் இருசார்பினரும் கையெழுத்திட்டானதும் 475-ரூபாய் செலவில் தந்தி மூலமாக லண்டனுக்குப் பிரதம மந்திரிக்குத் தெரிவிக்கப்பட்டு, அவரும் ஒப்புக்கொண்டாகி விட, 26-ம் தேதி மாலை 4¼-மணிக்குப் பிரதம மந்திரியின் பதில் நகல் மகாத்மாஜியிடம் தரப்பட்டது. அதை அவர் ஒருவாறு ஏற்றுக் கொண்டு தமது உபவாசத்தை முடித்துப் பகவானை ஸ்தோத்தரித்தானபின் இரண்டு கமலாப்பழங்களின் ரஸத்தைப் பானம் செய்தார். ஸ்ரீரவீந்திரநாத் டாகூரும் அந்த சமயம் அங்கிருந்து வாழ்த்திய வைபவம் மஹா புனிதமானது. தாழ்த்தப்பட்டோர்களை "ஹரிஜன நல்பர்கள்" என்ற பெயரினால் மகாத்மா அழைத்து, தீண்டாமைப்பிணி இனி ஒழிந்து ஹிந்துக்களும் ஹரிஜன நண்பர்களும் ஒரு ஸமூகமாய்ச் சேர்ந்து வாழவேண்டுமென்று பிரார்த்தித்தார். எதிர்பாராத பகவத் ஸங்கல்பத்தினால் உதயமான இந்த மகா ஸம்பவத்தின் மூலமாக இந்தியாவைப் பிடித்த சாபமான தீண்டாமைப் பிணி காளடைவில் மறைந்து போகுமென்று நம்பலாம். ஜாதி ஹிந்துக்களின் மௌடீகமான அகங்காரத்துவ பேதம் இனிக் காலக்கிரமத்தில் நீங்கி விடவுங்கூடும். அநேக ஆலயங்கள் ஹரிஜன நண்பர்கள் உட்செல்வதற்காகத் திறக்கப்பட்டன. எத்தனையோ சமபந்தி போஜனங்களும் நடந்தேறின. ஸமூகப்பிளவு என்பதிலும், பிரிந்து கிடத்தல் என்பதிலும் பெரியதோர் கொடிய நஞ்சு உலகில் வேறில்லை. ஃ

**தீண்டாமையைப் போக்கும் கூட்டம் :—**

பம்பாயில் பண்டித மாளவியாவின் தலைமையில் தீண்டாமையை அகற்றும் விஷயமாய் மாபெரும் நாடு ஒன்று கூடிற்று. இதற்காக ஒரு சங்கமும் ஸ்தாபிதம் செய்தனர். போபால் நவாப் 5000-ரூபாய் நன்கொடை உதவினர். இவ்வருஷமும் அடுத்த வருஷமும் வருஷம் 70-ஆயிரம் ரூபாய் வீதம் தருவதாக 12-ஹிந்து பிரமுகர்கள் வாக்களித்தனர். "கங்கா நதியில் அசுத்த நீர் பல உபநதிகள் மூலம் வந்து சேர்ந்தாலும், அந்த அசுத்த ஜலமும் கங்கையின் பரிசுத்த நீரினல் சுத்தமாய் விடுகிறது. அவ்விதமே "ஹரி ஜனங்கள்" கோவில்களுக்குள் நுழைந்தவிடின் அவர்களும் பரிசுத்தர்களாகி விடுவர். தீண்டாமை என்பது சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டிருக்கிறதென்று கூறுவோர் சாஸ்திரங்களின் உண்மைக் கருத்தை உணர்ந்தவர்களன்று" என்று பண்டித மாளவியாஜி புகன்றார். எவ்விதமோ இனி தாழ்த்தப்பட்டோருக்கு இடம் கொடுத்து உபசரிக்க வேண்டியது தான். ஹிந்து வைதீகர்கள் பௌத்தமதம் பிரபலமாயிருந்த காலத்தில் பௌத்தரை விஷ்ணுவின் பௌத்தாவதாரமாகத் தங்களின் சாஸ்திர நூலுக்குள் நுழைத்துக் கொண்டனர். இஸ்லாமியரின் ஆட்சியின்போது டில்லி சக்ரவர்த்தியின் குமார்த்தியைத் திருநாராயணபுரத்திலுள்ளவிக்கிரகமான பெருமாள் திருமணம் கொண்டதாக எழுதி வைத்துக்கொண்டனர். பிறகு தாழ்த்தப்பட்டவர்களான திருப்பாணுழ்வாரையும், நந்தனுரையும் ஆலயங்களுக்குள் வைத்துப் பூசிப்பதாயினர். இந்த ஆங்கில ஆட்சியிலே உடன்கட்டை ஏறுதலை விடுத்து, இப்போது சாரதா சட்டத்திற்கும் தலைவணங்கி உட்பட்டுப்போய், சட்டை பூட்சு தொப்பிகளணிந்து ஆங்கிலேயரின் கிருபையைப் பெற அரும்பாடு படுவதாயினர். கடல் யாத்திரை மகா தோஷம் என்ற வைதீகர்கள் இப்பொழுது ஜாடையாக இருந்து விட்டனர். வைதீகர்களில் வெகு பேருடைய சந்தியாவர்தனுதிகள் ஆகாயத்தில் மறைந்து போய் விட்டன. தாழ்த்தப்பட்டவனொருவன் கல்வியற்றவனுயிருப்பின், அடே எட்டிப்போடா என்று வைதீகர் கத்துவார்! அவனே நன்கு கற்று டிப்டி கலெக்டராக வந்தால் எதிரே நின்று ஸலாம் போடுவார்! தீண்டாதார் இஸ்லாமிய மதத்திலோ—கிறிஸ்து மதத்திலோ சேர்ந்துவிட்டால்—அப்போது அவர்களிடம் கை குலுக்கலாமாம்! ஹிந்து மதத்திலேயே இருந்தால் அன்னேரைத் தொடுவது மஹா தோஷமாகுமாம்! இன்னும் இதேமாதிரியான—ஹிந்துமதத்திற்கோ, தேசிய வளர்ச்சிக்கோ அனுகூலமாயில்லாத வெறுக்கத்தக்கதான பிடிவாதம் பிடித்த இந்த வெளி வைதிக ஆசாரங்களும், அவர்களின் ஹிம்ஸைகளும், வேற்றுமைகளும் இனி நீடித்து நில்லாது. தீண்டாதாரை எதிர்ப்பது எதிர் ஆறு நீந்துவதுபோன்று மிகு கஷ்டமாகிவிடுமென்பதையும் வருங்காலமே இனி தெரிவித்துவிடும்.

---

ஒருமக்மல் பட்டுத் தலையணையில் தன் தலையைச் சாய்த்து அந்த மிருதுவை அனுபவிக்கிற இன்பத்தைவிட, அந்தத் தலையணையின் மீதே தன் கைகளின்மேல் சிரசைவைத்து உறங்கும் இன்பமே நெஞ்சுக்கு அதிக ருசிப்பும் திருப்தியும் தருகிறது. தன் சொந்த வஸ்துவில் தான் யெவருக்கும் அதிக திருப்தி. பட்டுத்தலையணை இரவலே. அது கைகளைப் போல் தன் தேசத்தோடு சேர்ந்து ஒட்டியிருப்பதல்ல.

# போனுப் போருண்டி!



"இப்போது தான் உங்களை நினைத்தோம். அதற்குள் நீங்களும் வந்துவிட்டீர்கள். உங்கள் தகப்பனார் மிகவும் கண்டிதமாக ரூபாய் 1500-க்குக் குறைந்து முடியாதென்று தெரிவித்துவிட்டார். என் கையிலோ ரூபாய் 500-தான் இருக்கிறது. என் மனைவியின் நகைகளை விற்றே அந்த ஐந்நூற்றை ஆயிரமாக்கவேண்டும். இதற்கே திண்டாட்டமாயிருக்கையில் மேற்கொண்டு 500-க்கு நான் எங்கே போவது? எனக்குச் சக்தியில்லை. இதை நீங்கள் நல்ல மனசுவைத்து உங்கள் அப்பாவுக்குத் தெரிவித்து சம்மதிக்கச் செய்யவேண்டும்" என்றார்—தமக்கு இனி வரப்போகும் மாப்பிள்ளையான கணபதியைப் பார்த்து அருணாசலமய்யர்.

ஃ

கணபதி சென்னையில் பி. எல். பரிக்ஷைக்கு வாசித்துக்கொண்டிருந்தான். அவன் தந்தை ஜெகநாதய்யர் தஞ்சாவூரில் ஒரு மிராசுதார். அவர் தமது குமாரனுக்குச் சென்னை அருணாஜலமய்யரின் பெண் விசாலாக்ஷியைப் பேசி நகைகள் ரூபா 2000-த்துக்கும், மேற்கொண்டு ரொக்கம் ரூபா 1500-க்கும் சம்மதித்தால் ஒப்புக்கொள்ளுகிறதாகத் தெரிவித்திருந்தார். அருணாஜலமய்யருக்கு ஒரு பையனும் பெண்ணுமே கடவுள் கொடுத்த சொத்து. எவ்விதமோ சிறுகச் சிறுக இரண்டாயிரம் ரூபாய் வரையில் தமது பெண்ணுக்கு நகைகளைப் போட்டிருந்தார். இப்போது ஆயிரம் ரூபாய்க்குமேல் அவர் கையில் ஒரு காசுமில்லை. விவாகச் செலவுகளுக்கு வேறு தனியாகக் கடன் வாங்கியே ஆகவேண்டும். தமது எளிய நிலையை மிகு வணக்கமாக ஜெகநாதய்யருக்குத் தெரிவித்ததற்கு அவர் ஒரே கண்டிப்பாக 1500-இல்லாவிடில் வேறிடம் பார்த்துக்கொள்ளலாம் என்று எழுதிவிட்டார். இதைக் குறித்து அருணாஜலமய்யர் விசாரத்துடன் யோசித்துக்கொண்டிருந்த போது கணபதி தனது புது மாமனாரின் வீட்டிற்கு சாதாரணமாக வந்து போவதுபோல் அன்றும் வந்தான். அருணாஜலமய்யர் சொன்னதைக் கேட்ட கணபதி, தான் இந்த விஷயத்தில் பிரவேசிப்பதற்கில்லை யென்றும், தன் தகப்பனாரின் பிரியப்படியே தான் அவர்கள் நடக்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினான்.

ஃ

அருணாஜலமய்யர்:—உங்கள் பிதாவின் பிரியப்படித் தொகை கொடுக்க எனக்கு சக்தியில்லையே. என் பெண் விசாலாக்ஷியை எவ்வளவோ நற்குணங்களோடும் வளர்த்து, ஏழாவது வகுப்பு வரையில் படிப்பும் சொல்லிக் கொடுத்திருக்கிறேன். தங்கமான குழந்தை. நீங்கள் பணத்தைப் பார்க்காமல் பெண்ணின் உத்தம குணங்களை மனதில் வைத்து எவ்விதமும் உங்கள் அப்பாவை ஆயிரத்துக்கு ஒப்

---

எவ்வளவு தான் முன்னேறிச் சென்றுவிட்டதாகத் தமுக்கடித்துக் கொண்டாலும், 100-க்கு 99—பேர் பழய களிமண்ணாகவே இருக்கிறார்கள்!

புக்கொள்ளச் சொல்லுங்கள். நீங்கள் என் பெண்ணுடன் பேசிப் பழகி அவளை நன்ருக அறிந்திருப்பதால் நான் அதிகம் சொல்லவேண்டிய தில்லை.

கணபதி:—இவ்வளவு பெரிய வீட்டை வைத்துக்கொண்டு பண மில்லை யென்கிறீர்களே?

அருணஜலமய்யர்:—நன்ருகக் கேட் டீர். என் குமாரனுக்கு இந்த வீட் டைத்தான் ஆஸ்தியாக வைத்துவிட் டுப்போக நினைத்திருக்கிறேன். அதை அடகுவைக்க எனக்கு இஷ்டமில்லை. அதை மறுபடி பணம்தந்து திருப்பிக் கொள்ளவும் எனக்கு சக்திகிடையாது.

ஃ

இந்த சம்பாஷணைகளுக்கு மத்தி யில் ஒருபெண் அங்குவந்து அருண ஜலம் ஐயரின் வீடு இதுதானு என்று கேட்டாள். உடனே ஐயர் எழுந்து வந்து அப்பெண்ணை உற்றுப்பார்த்து, "அம்மா, நீங்கள் சாவித்திரியா? என் நண்பன் ராகவன் கடவுளிடம் போய் விட்டானு? ஐயோ!" என்று கண்ணீ ருடன் கதறி நின்ருர். இந்த சமயம் கணபதியும் மெதுவாக நழுவி வெளி யில் சென்றுவிட்டான்.

ஃ

ராகவனும் அருணஜலமய்யரும் சிறு வயதுமுதல் எவ்வளவோ உயி ருக்குயிரான நேசர்கள். வயிற்றுப் பிழைப்பின் கஷ்டத்தால் வெகு வெகு தூரமான இடங்களில் வாழும் படி நேர்ந்து, கடிதப்போக்குகளும் இல்லாமற்போய், இன்ஞர் இன்ன பக்கத்தில் இருக்கிருர்கள் என்ப தையே அறிய முடியாதவரானுர்கள். ராகவன் வேண்டியவரைச் சம்பா தித்து வைத்துவிட்டுப் பகவானிடம் சென்றுவிட்டான். அவனுடைய ஒரே குமாரனுன கோபாலன் நன்கு வாசித் துத் திருநெல்வேலியில் ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தான். அவன் தாயார் சாவித்திரி செவ்வனே கற்ற கலாவதி. பழைய நாளில் அருணஜலமய் யருக்கு ஒரு பெண் பிறந்ததை நேரி லேயே கண்டவள். அந்தப் பெண்ணை எவ்விதமாவது தேடிப் பிடித்துத் தன் மகனுக்கு விவாகம்செய்து தன் பர்த்தாவின் ஆத்மாவைத் திருப்தி செய்ய வேண்டுமென்று எண்ணி ஞள். ராகவனும் சாகும்போது என் அருணஜலம் எங்கு இருக்கிருனே என்று அழுதுவிட்டுப் பிராணனை விட்டவன். இதை சாவித்திரி மறக்க வில்லை. வெகுநாள் பாடுபட்டு விசா ரித்து அன்றுதான் சாவித்திரி அருண சலமய்யரின்வீட்டைக் கண்டுபிடித்து உள்ளே நுழைந்தாள். விசாலாக்ஷி யைக்கண்டு கட்டிப்பிடித்துக்கொண்டு ஆயிரம் முத்தங்களிட்டாள். சாரதா சட்டத்தால் விசாலாக்ஷிக்கு இன்னும் விவாகம் ஆகாமலே யிருந்ததும் சாவி த்திரியின் பாக்கியமே.

ஃ

இந்த ஸம்பவங்கள் நிகழ்ந்து ஒரு மாதமாயிற்று. ஒருநாள் மாலையில் கணபதி சென்னை மூர்மார்க்கட்டில் தனது பாடசாலை நண்பனுன கோபா லனை எதிர்பாராதவண்ணம் சந்தித்து "ஏது கோபாலா, நீ எங்கிருக்கிருய் என்பதே தெரியவில்லையே" என்று க்ஷேமம் விசாரித்தான். அதற்கு கோபாலன் தான் இப்போது ஸ்டே ஷன் மாஸ்டராக இருப்பதாகவும், தனது விவாகத்திற்காகச் சென்னை வந்ததாகவும் கூறினுன்.

கணபதி:—வரதக்ஷிணை எவ்வளவு கேட்டிருக்கிருய்? என் அப்பாவும் இங்குதானே எனக்கு ஒரு பெண் பார்த்திருக்கிருர். ஒரு 500-ரூபாய் தகராரில் இருக்கிறது. அவர்கள்

வழிக்கு வராவிட்டால் வேறிடத்தில் ஏற்பாடு செய்ய என் தகப்பனர் முடிவு செய்துவிட்டார். பெண் குட்டிகளுக்கென்ன பஞ்சமா?

கோபாலன்:— மாப்பிள்ளைகளுக்கும் பஞ்சம் கிடையாதுதான். சாரதா சட்டம் ஏற்பட்டுப்போய் பெண்ணுக்கு 15-வயதானபிறகே விவாகம் என்று முடிவுக்கு வந்துவிட்டபிறகு, ருதுவாவதற்கு முன்பே விவாகம் செய்யவேண்டுமே என்கிற பயமும், அதற்காக மாப்பிள்ளைகளைத் தேடி அலைகிற அவசரங்களும் இப்போது நீங்கிவிட்டன. ஆதலின், வரதக்ஷிணையும் குறைந்துவிட்டது. பிராமணரல்லாதாரைப்போல ருதுவான பிறகும் இரண்டு மூன்று வருஷங்கள் பொறுத்துச் செய்வதென்று நமது ஜாதியில் சிலர் துணிந்துவிட்டார்கள். நான் இப்போது ருதுவான பெண்ணையேதான் விவாகம் செய்துகொண்டேன். வரதக்ஷிணை ஒரு காசுகூட வாங்கமாட்டேன் என்று என் தாயார் மறுத்துவிட்டார். அதில் எனக்கும் அதிக சந்தோஷமே.

கணபதி:—நீ ஒரு பைத்தியக்காரன், உன் தாய் ஒரு பைத்தியக்காரி. கை நிறைய வரக்கூடிய பணத்தை வேண்டாமென்றது சுத்த முட்டாள்தனம். பணத்தின் அருமை உனக்குத் தெரியவில்லையே? அட ஏமாந்தவனே!

கேபாலன்:—பணத்தின் அருமையைவிடப் பெண்ணினுடைய நற்குணங்களையும் படிப்பையுமே மேலாக நினைத்தேன். என் தாயும் பெண்ணின் குணசீலங்களையே விரும்பினுள். நாங்கள் ஒன்றும் ஏமாறிப் போகவில்லை. பரம திருப்தியே.

ஃ

இந்த சமயத்தில் கமலாப்பழங்களை வாங்கிக்கொண்டு விசாலாக்ஷி ஜெகன்மோஹினிபோல் அங்குவந்து நின்றாள். அவளைக் கண்டதும் கணபதி பிரமித்து "ஏது காரியம் மிஞ்சிவிட்டதுபோலிருக்கிறதே" என்று தன் மனதிற்குள் எண்ணினான். விசாலாக்ஷி சற்றே தூரவிலகி, "அதோ பார் பணத்தையே முக்கியமாக நினைத்த கணபதியை" என்று தன் தாயாருக்குச் சுட்டிக் காட்டினாள். அதற்கு அவள் தாய் அருவருப்புடன், "அவன் கதை இப்பொழுது எதற்கு? அருமையானநமதுவீட்டை அடகு வைக்கும்படி சொன்ன பத்திசாலியல்லவோ அவன்? "போனுப் போறண்டி." உன்னைக்கண்டு அவன் பல்லை இளிக்கிறதைப் பாரு" என்று கூறினாள். கணபதியும் இதைக் கேட்டுவிட்டு நாணத்துடன் கோபாலனோடு சொல்லிக்கொள்ளாமலே பெருமூச்சுடன் சென்றுவிட்டான். விசாலாக்ஷி தன் கணவனை நெருங்கி, "உங்களுடன் பேசிக்கொண்டிருந்தவருக்கே முதலில் என்னைக் கொடுக்க ஏற்பாடாகியிருந்தது" என்று கூறினாள். அதைக் கேட்ட கோபாலனும் அப்படியா சங்கதி, அதுதான் என்னிடம் சொல்லாமலே போய்விட்டானே என்று திகைத்தான். விசாலாக்ஷியின் தாய் மறுபடியொரு தரம் "போனுப் போறுண்டி" என்று மங்களம் பாடினாள்.

---

*தனக்குச் சமானமற்றவனைத் தன் பக்கத்தில் வைத்துத் தனது காரியங்களைச் செய்வதில், பக்கத்திலிருப்பவனால் தன் காரியம் கெடுவதுமன்றி, தனது வேலையின் போக்கையும் அவன் அறிந்துகொண்டு கடைசியில் தனக்குப் போட்டி மனிதனாகவும் வந்துவிடுகிறான். எனவே, எதிலும் ஒரு திரை மறைவு வேண்டியிருக்கிறது.*




# இராஜசந்திரன்



(356-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XIV.

கண்ணப்பனுக்கு இதைக் கேட்டதும் அபிராமி கூறியது முற்றிலும் பொய்யென்று தோன்றிற்று. உடனே உற்சாகத்துடன் இன்னும் இரண்டு மாதங்களுக்குள் உன்னைக் குற்றத்திலிருந்தும் விடுவிக்கிறேன் என்று தேறுதல் உரைத்து, நூறு ரூபாய் நோட்டு ஒன்றை இராஜசந்திரனிடம் கொடுத்து அனுப்பினான்.

### அத்தியாயம்—14.

### பொன்னுசாமியின் தேர்தல்.



பௌரிங்கிப் பேட்டையில் சுகாதார விஷயங்களைக் கவனிப்பதற்காக அவ்வூரிலுள்ள வயிறு வாடாதவர்களான சில முக்கியஸ்தர்கள் சேர்ந்து ஒரு சபையையேற்படுத்தியிருந்தார்கள். அதில் ஸ்ரீநிவாச முதலியாரும் ஒருவராவர். அச்சபையின் பத்து அங்கத்தினர்களும் யாதொரு லாபத்தையும் எதிர்பாராமல் கௌரவத்திற்காகவும், பொதுஜன சுகத்திற்காகவும் வேலை பார்ப்பது வழக்கம். இந்தப் பத்து பேர்களுள் ஒருவராகிய பொன்னுசாமியின் தந்தை இறந்து விட்டபடியால் அவருக்குப் பதிலாக ஒருவரை நியமிக்க அதிகாரிகள் தீர்மானித்து அதற்குரியவர் யாரென யோசித்ததில் லாயர் கண்ணப்பனே தக்கவர் என்று முடிவுசெய்தனர். கண்ணப்பன் தனது வக்கீல் வேலையின் தொல்லையை நினைத்து முதலில் மறுத்தபோதிலும், பிரபலஸ்தர்கள் மிகவும் வற்புறுத்தியபடியால் சம்மதித்துக் கொண்டான். அதற்குப் பிறகு வீதிகள்தோறும் "லாயர் கண்ணப்பனைத் தேர்ந்தெடுங்கள்" என்று பெரிய எழுத்துகளில் விளம்பரங்கள் ஒட்டப்பட்டன.

ஃ

இங்கு பொன்னுசாமியைப்பற்றிச் சிறிது கூறவேண்டியிருக்கிறது. அவன் கண்ணப்பனின் வீட்டை விட்டுப் புறப்பட்ட பின்பு ரூபவதியான ஒரு கன்னிகையை விவாகம் செய்து கொண்டான். அறுபது நாள் ஆசையும், முப்பது நாள் மோகமும் தீர்ந்தபின்பு முன்போலவே வேசியாப் பிரியனாய்த் திரியத்தொடங்கித் தன் மனைவியைக் கண்டபடி ஹிம்ஸித்து

வந்தான். இவனது உபத்திரவங்களைப் பொறுக்க முடியாமல் அப்பெண்மணி தற்கொலை செய்துகொண்டு மடிந்தாள். பொன்னுசாமிக்கும் ஒருத் தியையே கட்டிக்கொண்டு அழுகிற தொல்லை தீர்ந்து போய்விடவே, அவன் ஸ்வாதீன புருஷனுகி முன்னிலும் மூர்க்கமான மனிதனுனுன். அவன் கையிலிருந்த பணமும் வர வரக் குறைந்து கொண்டே வந்தது. உழைத்துத் தேடியுண்ணுமல் தந்தையின் சொத்துகளையே உட்கார்ந்தபடி தின்பவனுக்கு அந்தச் சொத்துக்கள் எவ்வளவு காலத்திற்கு இருக்கும்? முனிசிபல் கௌன்ஸிலர் வேலைக்கும், சேர்மன் பதவிக்கும் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் வாரிக் கொட்டியும் பயனின்றித் தோல்வியடைந்தான். சர்க்கார் மந்திரிகளை எவ்வளவோ வைபவமாய் உபசரித்தும் ஒரு "ராவ் சாகிப்" பட்டங்கூட அவனுக்குக் கிடைக்காமற் போயிற்று.

ஃ

பொன்னுசாமியின் ஆடம்பரத்தையும் அழகையும் கண்டு ஒரு ஜமீன்தார் தம்மிடம் மானேஜராக அமர்த்திக்கொண்டார். ஆனுல், அவன் பானதாரியானதால் அந்த உத்தியோகம் போயிற்று. வேறொரு தனவான் இவனது கெட்ட நடத்தையை மனதிற் கொள்ளாமல் லாபத்தின் ஆசைக்காக இவனைப் பங்கு சேர்த்துக் கொண்டு ஒரு கடை வைத்தார். லாபம் அப்படி இருக்கட்டும். கடனே அதிகரித்து வந்தது. வியாபாரம் நின்றுபோய்க் கடையை மூடியாய் விட்டது. அதில் பொன்னுசாமிக்கு இரண்டாயிரம் ரூபாய் நஷ்டம். இதானபிறகு ஒரு கிராமத்தில் ஸ்கூல் மாஸ்டரானுன். அக்கிராமத்தில் மத்தியம் அகப்படாமல் அவன் பாரியாய் அதை விட்டுவந்துவிட்டான். அதானதும் ஒரு நியூஸ்பேபர் போட ஆரம்பித்தான். இதில் சிலகால் நல்ல லாபம் வந்து கையில் இரண்டுபணம் ஓடிக்கொண்டிருக்கையில் வியபிசாரம், குடி முதலிய காரணங்களால் பிரதிதினமும் போலீஸ் டாணுவுக்குப் போய்வரவேண்டி வந்தது தனது நியூஸ்பேபரின் பிரக்யாதியைக் காண்பித்து எவ்வளவுவரையில்கடன்வாங்க முடியுமோ, எவ்வளவுவரையில் ஊர் தாலியை யறுக்க முடியுமோ அவ்வளவுக்கு வேலை செய்துவிட்டுப் பிறகு வாரண்டு பிறக்குமென்று பயமுதிக்கவே நியூஸ்பேபரைக் கைவிட்டு சந்தர்ப்பணங்களுடன் எங்கேயோ மாயமாய்ப் போனுன். சில நாட்கள் கழித்துத் தற்செயலாய் மிதந்து வந்தவன்போல் மறுபடியும் பௌரிங்கிப் பேட்டைக்கு வந்து சேர்ந்தான்.

ஃ

தன் தந்தை வகித்திருந்த கௌரவ ஸ்தானத்திற்குக் கண்ணப்பன் ஒரு அபேக்ஷகராய் முன்நிற்பதையறிந்ததும், அதிக கோபங்கொண்டவனுகி, தனக்கு நேர்விரோதியான லாயர் கண்ணப்பன் தன் தந்தையின் ஸ்தானத்தில் அமருவதைக் கண்ணுல் பார்ப்பதிலும் பெரிய கேவலம் வேறில்லையென்றும், தானே அந்தக் கௌரவ மெம்பர் ஸ்தானத்திற்குப் பிரயத்தனப்படவேண்டுமென்றும் எண்ணி, உடனே தன்னுடைய லாயரின் வீட்டிற்குச் சென்று தன் அபிப்பிராயத்தைக் கூறினுன். இவன் கூறியதைக் கேட்டதும் லாயர் ஆச்சரியமடைந்து பொன்னுசாமி, நான் சொல்வதைச் சற்று கவனமாகக் கேள். ஒரு காரியத்தை ஆரம்பிக்கு முன் எதிரியின் பலம் எப்படி யென்பதையும் யோசித்துக் கொள்ளவேண்டும். லாயர் கண்ணப்பனே மிகு மேதாவி, நற்குணங்களுக்கெல்லாம் நாயகம், அவன் மனைவி கமலவல்லியோ தெய்வலோக ஸ்திரீ, கண்

ணப்பனின் பிரபலம் எவரும் அறிந்தது. அவனை விரோதித்துக்கொண்டு நீ வெற்றிபெற முடியாது. உன் வழக்கைத் தன் செலவிலேயே நடத்தி உன் தந்தையின் பணத்தை வாங்கித் தந்த கண்ணப்பனின்மேல் நீ நன்றி கெட்டு எதிரியாக நிற்பது நியாய மல்ல என்றார்.

பொன்னுசாமி:—பழய சங்கதிகள் வேண்டாம். இப்போதைய புதிய சங்கதியில் என் தந்தையின் ஸ்தானத்தைப் பறிக்க எண்ணும் கண்ணபபன் எனக்கு ஒரு எதிரிதான். அவனை எவரும் தேர்ந்தெடுக்க முன்வராதபடி நான் தக்க ஏற்பாடு செய்துவிடுகிறேன்.

லாயர் :—அடடா! உன்னால் முடியுமா?

பொன்னுசாமி :—என்னால் முடியாவிடினும், என்னிடமுள்ள பணத்தின் உதவியால் முடியும்படி செய்து விடுகிறேன்.

லாயர் :—பணத்தை முன்பின் யோசனையின்றித் தாராளமாகச் செலவு செய்வதாயிருந்தால் ஒரு வேளை ஜெயம்பெற முடியும்.

பொன்னுசாமி :—எவ்வளவு பணம் வேண்டுமானாலும் நான் கடன் வாங்கியாவது கொண்டுவருகிறேன். நீங்கள் தகுந்த ஏற்பாடு செய்யுங்கள் என்றான்.

ஃ

லாயர் உடனே ஒரு காகிதத்தை எடுத்து அடியில் வருமாறு எழுதினார்.

அறிவிப்பு.

பௌரிங்கிப்பேட்டையில் வசிக்கும் பொதுஜனங்கட்கு ஓர் தெளிவான விண்ணப்பம்.

இதன் அடியில் கையொப்பமிட்டுள்ள நான் என் தந்தையின் ஸ்தானத்தைப் பெற எல்லா வகையிலும் தகுதியுள்ளவனென்பதை நீங்கள் அறிவீர்கள். என் தந்தை இந்தப் பௌரிங்கிப்பேட்டை சுகாதார இலாகாவின் கௌரவ உத்தியோகத்தில் ஓர் மெம்பராக இருந்து எவ்வளவோ உழைத்திருப்பதற்கு என்னை இதுசமயம் தெரிந்தெடுப்பது அவரது ஊழியத்திற்குச் செய்யும் பிரதி கைம்மாறாகும். என் தந்தையின் ஸ்தானத்தைப் பேராசைப்பட்ட மனிதனாகிய லாயர் கண்ணப்பன் பெறுவதற்கு ஒரு அபேக்ஷகராக முன் நிற்கிறார். அவர் லாயர் உத்தியோகத்திலிருப்பவராதலால், அவருக்குப் பொய்யும் புளுகுமான தன் வேலையை விட்டுவிட்டு பௌரிங்கிப்பேட்டையின் சுகாதார விஷயங்களைக் கவனிக்கவாவது, இவ்வூர் ஜனங்களுக்கு யாதேனும் ஓர் சுகத்தைச் செய்யவாவது சற்றும் ஓய்வே கிடையாது. அதுவுமன்றி அவர் பௌரிங்கிப்பேட்டையில் குடியிருப்பவரல்லவாதலால், தான் குடியிருக்கும் ஊராகிய "நைன்ரீப்ஸ்"லிலிருந்து அடிக்கடி பௌரிங்கிப்பேட்டைக்கு வரவும் சாத்தியமாகாது.

நானோ இவ்வூரிலேயே குடியிருப்பவன். எனக்கு வேறு யாதொரு வேலையுமில்லாததால் இக்கௌரவ உத்தியோக ஸ்தானத்தை எனக்குக் கொடுத்தால், நான் பொதுஜன சௌக்கியத்தை யெல்லாம் வெகு சிரத்தையாகக் கவனித்து வருவேன். இதற்குமுன் என் தந்தை அந்த ஸ்தானத்திலிருந்து வந்திருப்பதால், அந்த வகையிலும் எனக்கு அதைப் பெறப் பாத்தியதை இருக்கிறது.

மேலும், இன்னொரு அநியாய சங்கதியையும் கவனியுங்கள். மஹாத்மா காந்தி என்பவர் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்குத் தனித் தொகுதி என்று தனியான பிரிவு கொடுக்கக் கூடாதென்று அதற்காக இந்த

1932-ம் ஞு செப்டம்பர் மாதம் 20-ம் தேதிமுதல் உண்ணு விரதம் இருந்து பட்டினி கிடந்து வெற்றி பெற்றுவிட்டார். அந்த மகாத்மாவின் கொள்கையை லாயர் கண்ணப்பர் ஆதரித்து ஹிந்துக்களுடன் தாழ்த்தப்பட்டவரும் சேர்ந்தவரேயென்று காட்டுவதற்காக இவ்வூர் சிவன் கோயிலையும், விஷ்ணுவின் கோயிலையும் தாழ்த்தப்பட்டவர்கள் உள்ளே போவதற்குத் திறந்துவிட ஏற்பாடு செய்துவிட்டார். இந்த அநியாயம் எங்கேயாவது உண்டா? தாழ்த்தப்பட்டவர்கள் நமது பிராமணர்களுடைய பரிசுத்த கோயில்களுக்குள் வந்து அசுத்தம் செய்யலாமா? இப்படி அக்கிரமம் செய்யும் லாயர் கண்ணப்பரா உங்களுக்கு நன்மை செய்யப்போகிறார்?

பௌரிங்கிப்பேட்டைவாசிகளே! நாளையதினம் கூடப்போகும் சபையில் லாயர் கண்ணப்பனுக்குப் பதிலாக எனக்கே அந்த மெம்பர் ஸ்தானம் கொடுக்கப்படவேண்டுமென்று வோட் (Vote) கொடுங்கள். நான் பொது ஜன சுகத்தை சதா கவனித்து வெகு சீர்திருத்தங்கள் செய்வேன்.

இங்ஙனம்,
பொன்னுசாமி.

என்று எழுதி முடித்து பொன்னுசாமியிடம் தந்து, இதை உடனே அச்சுக்குக் கொடுத்து லக்ஷக்கணக்கான நோட்டீசுகளை அச்சிட்டு இவ்வூர் முழுதும் பிரசுரப்படுத்திவிடு. அதுவுமன்றி அநேகரிடம் சென்று உனக்கு வோட் கொடுக்கும்படி கேட்டுக்கொள். அவ்வாறு செய்ய மறுத்தால் அவர்களுக்கு ஏதாவது பணம் கொடுத்து அவ்வாறு செய்யும்படிச் சரிப்படுத்திக்கொள். வோட் உனக்குக் கிடைக்கும்வரையில் ஒவ்வொருவரின் காலையும் பிடித்துக்கொண்டு கெஞ்சு. நீ ஜெயித்த பிறகு அவர்களை உதைத்து வெளியில் தள்ளலாம். அதுவரைக்கும் பரம சாது போலவும், மஹா ஜனோபகாரி போலவும், ஊருக்கே உழைக்கப் புறப்பட்ட தன்னயங்கருதாத மகோபகாரிபோலவும் உன்னைக் காட்டிக்கொண்டுதப்புத்தாளம்போடு. பெரியஎழுத்தில் "ஸ்ரீமான் பொன்னுசாமியைத்தேர்ந்தெடுங்கள்" என்று அச்சிட்டு அதை ஊர்முழுதும் சுவர்களில் ஒட்டிவிடு. பணத்தை மதியாமல் பவுனைப் பைசாவாக நினைத்துச் செலவிட்டு நான் கூறியபடி செய்தால் நீ ஒருவேளை ஜெயம் பெறக்கூடும் என்றார்.

(தொடரும்) S. G. R.




# இத்தேசத்தின் ஆசார உபசாரங்கள் எங்கே?



எந்தெந்த ஊர் ஏற்பாடுகளையும் எங்களுடையதுதானென்று விலை கொடுத்து வாங்கிக் கொண்டு அந்தப் புது சோக்கிலும், முறைப்பிலும், தளுக்கு சிங்கார ஜோர்களிலும் தலை துள்ளிப்போகும் இவ்வூர் மம்மங்காய்களுக்கும், அதிகப் பிரசங்கிகளான திம்மக்காள்களுக்கும், பொம்மக்காள்களுக்கும், அவர்களின் குட்டி குழந்தைகள் பிஞ்சு பிதுருகள் யாவற்றுக்கும்—விகடக் குரு பிரசாதியாகிய நான், என் விகடஞானத்தைச் சற்றே விரித்துக் காண்பிக்காவிட்டால் பெருத்த பெருத்த தொந்தரைகளுக்கெல்லாம் மாட்டிக்கொண்டு லோட்டம் போட்டுக்கொள்வார்களானபடியினால்; இந்தத் தடவை இத்தேசத்தின் ஆசார உபசாரங்களைப்பற்றிக் கொஞ்சம் ஆலோசனை பண்ணுவதைக் கேட்கக் கடவார்களாக. புது நாகரீக ஐயாவே! அம்மாவே! உங்களுக்கொரு சங்கதி!

ஃ

இந்த நமது புண்ணிய தேசத்திலே, முதலாவது ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்வதிலேயும், வினவிக்கொள்வதிலேயுமே மெத்த மெத்த சாஸ்திரோக்தமான ஏற்பாடுகளையெல்லாம் முற்காலத்து சனியன் பிடித்த சாஸ்திரிகளும், காடுகாடாய்த் திரிந்த தாடி ரிஷிகளும், தரித்திரம் பிடித்த தாசர்களும், கிடைத்த இடத்திலுண்டு விட்டுக் கை கழுவிய தெய்வப்புலவர்களும், தங்களுடைய திரிகால ஞான சக்தியால் என்னென்னவோ வெல்லாம் கண்டு கண்டு வெகுவாக சாஸ்திர ஆசார மூட்டை முடிச்சுகளையெல்லாம் ஏற்படுத்திவைத்துப் போயிருக்கிறார்கள்! அதைக் கொஞ்சம் இங்கே விகடன் விவரிக்கிறேன் பாருங்கள்!

ஃ

நமது பக்கத்திலே ஒருவருக்கொருவர் சந்தித்துக் கண்டுகொள்ளும் சந்தர்ப்பம் நேர்ந்துவிட்டால், அவர்கள் கையெடுத்து வந்தனம் செய்வதிலேயே—(1) தாய் தகப்பன், அண்ணன் தம்பி, பாட்டன் பாட்டியாயிருந்தால் அவர்களுக்கு இருகையும் மரியாதையோடெடுத்து — உன்ன

மூவர்து உங்களை வணங்குகிறேன்— என்கிற அர்த்தமாக, ஹிருதயகமலத் தண்டை கைகூப்பி சரணம் சரண மென்று உச்சரிக்க வேண்டுமென்றும், (2) புத்தி போதிக்கும் குரு ஆசான் பெரியோர் முதலானவர்களுக்கு— அன்னோர் அறிவு உண்டாக்குகிற வர்கள் என்கிற அர்த்தமாக—நெற்றி யண்டை இருகையும் கூப்பி, நமஸ்கா ரம் அல்லது சரணமென்று உச்சரிக்க வேண்டுமென்றும், (3) எல்லாவற்றிற் கும் மேலான பரத்திற்கு வணக்கம் செய்யும்போது இருகைகையையும் தலைக்குமேல் கூப்பி வானுலகில் வாழும் ஒரு தனிமுதலே என்கிற அர்த்தமாகப் பாவித்து சரணம் சர ணம் என்று உச்சரித்து வணங்க வேண்டுமென்றும், இவ்வளவு யுக்தி யாக ஏற்படுத்தியிருக்கும் ஆசாரமா னது அனுசாரமாக மாறி அடடா! என்ன ஒரு விந்தையான நாகரிக (?) வந்தனங்கள் இப்போது நடந்தேறு கிறதப்பா! அட! காலக்கொடுமையே! அநியாய விபரீதமே! கோணலே!

ஃ

சரணத்திற்காக உபயோகப்படுத் தப்பட்டுவந்த அவர்களின் இரண்டு கைகளிலே இப்போது இடதுகை இடுப்பின்மேலே ஏறி முட்டான் கொடுத்துக் கொள்ளவும், வலதுகை வாக்கிங் ஸ்டிக்கைப் பிடித்துக் கொண்டு தாத்தாக்களைப்போலத் தடி யூன்றி நிற்கவும் வந்துவிட்டிருப்பதால் அப்பால் எங்கே இவர்கள் சரணமும், நமஸ்காரமும், தாஸனமும், தாஸன மண்டியும், மற்ற மண்டியும் போடப் போகிறது? எல்லா மண்டியும், எல்லா ஆசாரமும், வணக்கம் கும்பிடுகளும் காலைக் கிளப்பிக்கொண்டு கப்பலேறிப் போய்விட்டன! சரணமென்கிற வார்த் தையே பரலோகம்சென்று சாயுஜ்ய பதவியில்போய் முட்டிக்கொண்டு மறைந்தது! சரணம் என்கிற வார்த் தைக்குப் பதிலாக எல்லாம் "குட்மார் னிங்" (Good Morning) என்றும், இன்னும் கொஞ்சம் உருக்கமானால் "குட்மார்னிங்க, குட்மார்னிங்" என்று இருமுறையும், அதற்கும் மிஞ் சிய உருக்கமானால் மும்முறையுமாகச் சொல்லிக்கொள்வதே வழக்கமாய் விட்டிருக்கிறது. தன் தலைமேலேயே அடித்துக்கொள்வதுபோல தலைக்கு நேரே தடியைத்தூக்கி இறக்கி அதை ஒரு வந்தன வரிசைபோலக் காட்டு கிறதும், கைத்தடி அந்த சமயம் கையில் ஏறிக்கொண்டில்லாவிட்டால், ஒப்புக்குக் கையை உயர்த்தி எடுத்து விடுகிற சலாம் வரிசை நீட்டுகிறதும், அப்படியுமில்லாமற்போனால், விசை பொம்மை தலையைக் கீழும்மேலும் ஆட்டுவதுபோல் தலையைச் சட் டென்று தொங்கப்போட்டு உடனே ஒரு இமை நேரத்துக்குள் தூக்கிக் கொள்கிற மரியாதை தினுசிலுமாகவே மாறிப்போயிருக்கிறது! என்ன புது நாகரீக வந்தனுதிகளையா இவைகள்!!

ஃ

புறத்தியார்கள் மட்டிலாவது இவ் வளவுக்கு வணக்கம் நடக்கிறதென் ருல், தாய் தகப்பன்மாருக்குச் செய் கிற வணக்கமோ ஆ! ஆ! மெத்த தமாஷ்! தகப்பனைக் கண்டால் ஒரு

அந்தந்த மதஸ்தர்களும் தங்களின் வேத நூல்களை உயர்த்திப் புகழ்ந்து தமது மதஸ்தர்களைச் சிலாகிப்பார்கள். ஆனல், உண்மை யென்னவெனில், நனிப்புல்லாக மதவிஷயங்களை மேய்ந்தவர்களே அதிகம். தங்களின் மத புஸ்தகங்களின் பெயர்களை ஒரு சமயம் தெரிந்திருக்கலாம். அதைப் பாதி யளவுக்காவது வாசித்தோர் எங்கோ ஒரு சிலரே; அனுஷ்டிப்பவரோ அதிலும் கொஞ்சமே. வெளிப் பேச்சுகளின் ஆடம்பரம்தான் மிகுதி.

ஜாடையாகப் பார்த்தும் பாராதது போல முதுகையாவது திருப்பிக் கொள்கிறது—முகத்தையாவது திருப்பிக்கொள்கிறது! தாயாரைக் கண்டால் தானொரு புலியும் தாயார் ஒரு ஆடுமாக நிற்கிறது! இத்தனை கேடுகெட்ட இவன் தன்னைப்போன்ற ஒரு நாகரீக சிமானைப் பெற்றவனென்ற பேர் பெற வேண்டுமா?—தான் யாராவது ஒரு சிங்காரலேடிக்குப் புத்திரனாகப் பிறந்திருந்து—அந்தப் பெருமையைப் பலருக்கும் சொல்லிக்கொண்டு ஆனந்திப்பதாய் அமையக்கூடாதா? இந்த நான்சென்ஸ் கட்டைகளுக்கு இந்தக் காலத்து நவீன நினுசுகள் என்ன தெரியும்? ஒரு ஹோட்டலில் மேஜையில் உட்கார்ந்து ஐரோப்பிய மாதிரியாய் உண்ணவும் தெரியாதே என்று தாழ்த்தியாய் அவர்களை எண்ணி இகழ்ச்சி நோக்குடனே பார்க்கிறது! பாட்டன் பாட்டிகளைக் கண்டால் விளையாட்டுப் பொம்மைகளிடம் விளையாடுவதுபோல அவர்களை விளையாட்டுப் பொம்மைகளாக்கிக் காலங்கடந்த—சீர்திருத்த ,முடியாத—அறிவில்லாக் கட்டைகளென்று நினைத்துக் கண்டபடி கர்வித்துப் பேசுகிறது! மாமாமைத்துனன் முதலான உறவின் முறையாரைக் கண்டால், "கம்—ஸார்;" (Come Sir) "கோ—ஸார்," (Go Sir) "ஆல் ரைட் ஸார்" என்கிற வணக்கத்தைத்தான் செலுத்துகிறது! இன்னுஞ்சில பெரியோர்களைக் கண்டுவிட்டால் அந்த நோத்துக்கு வாயிலுள்ள சுருட்டையோ, பீடி—சிகரெட் மண்ணாங்கட்டியையோ கையால் மறைத்துக்கொண்டால் அது ஒரு நினுசான வந்தனமாகுமாம்! அல்லது அதுதானுமின்றி முகத்தைக் குதிரை லகான் போட்டதுபோல் முறைத்து நிமிர்த்திக்கொண்டு பாராக்காகவே சிரிப்புமட்டும் கொஞ்சம் மூஞ்சிமேல் வைத்துக்கொண்டு விர்ரென்று நடந்துவிடுகிறதும் ஒரு வந்தனமாம்! இவைகள்தான் தற்காலத்து வணக்கமாய்ப் போயிருக்கின்றன!

ஃ

வணக்கத்தின் விமரிசைகள் இவ்வாறெல்லாம் புது மோஸ்தரிலே போவதாயிருக்க, இனி ஒருவருக்கொருவர் வீட்டிலே சந்திக்கும்படியான சந்தர்ப்பங்கள் நேர்ந்துவிட்டாலோ அப்போது பாருங்கள் வேடிக்கையை! வாருங்கள், உட்காருங்கள்! என்கிற மரியாதையுமில்லை; மணை போடுங்கள், பாய் போடுங்கள், ஜமுக்காளம் போடுங்கள்! என்கிற வார்த்தையுமில்லை! "கம் ஆன் சிட் டவுன்—டேக் சேர்" என்கிற ஆங்கிலப் பேச்சாகப் போயிருக்கிறது! வீட்டுப் பெண்களோ——வந்தவர்களுக்குக் கையெடுத்து வணங்குவதோ, சரணம் சொல்வதோ, காலில் விழுந்து நமஸ்கரிப்பதோ இதுகளையெல்லாம் எங்கேயோ தொலைத்துத் தலைமுழுகிவிட்டார்கள்! வந்தவர்களின் எதிரே பல்லிளிக்கிறதும், தங்களின் நாகரீக நடைஉடை மினுக்குகளைத் தெரியக் காட்டிக்கொள்கிறதும், சளுக்கு புளுக்கென்று கூடத்திற்கும் அறைக்கும்

---

சிரசானது உடலுக்கு நாயகமாகவும், தலைமையாகவும், சிகரமாகவும் அரசஸ்தானத்தில் இருத்தலால் படுத்துக்கொள்ளுகையில் தலைக்குமட்டும் தனிமரியாதையாக ஒரு தலையணை தந்து உபசரிக்க வேண்டியிருக்கிறது. சரீரத்தின் மற்ற அவயவங்கள் தரையிற் கிடந்தாலும் கவனிக்கப்படுவதில்லை. தலையைமட்டுமே தரையில் விழாவாறு உயர்த்தி ஒன்றின்மேல் வைக்கும்படியாகிறது. எந்தத் தலையணையும் கிடையாவிடத்துக் கைகளே இயற்கைத் தலையணையாக வந்து உதவுகின்றன.

ஒய்யார நடை நடந்து காட்டுகிறது மான இருபதாம் நூற்றாண்டின் புது ஆசாரத்திலே வந்துவிட்டிருக்கிறார்கள்! இவர்கள் போடுகிற நாகரீக நடைக்குத் தக்கபடி இவர்களின் புருஷன்மார்களுக்குச் சம்பளம் உயரக் காணாதது ஒரு பரிதாபம்தான்! இதற்கு அப்பால் இவர்கள் பெற்ற பையன் ஆபீசிலிருந்து வீட்டுக்கு வருகிறதில், வந்தவர்களை எறெடுத் தங்கூடப் பார்க்கிறதில்லை! அந்த சமயத்திலே ஒரு திமிரையும், விரைப்பையும், ஒரு முறுக்கையும் காட்டிக் கொண்டு என்னவோ வெகு பெரிய மனிதனைச் சட்டென்று உள் நுழைந்து தன் அறைக்குப் போய் விடுகிறான்! அதற்கப்பால் அரை—முக்கால் மணிநேரம் பொறுத்து ஒரு சிரிப்பைத் தன் மூஞ்சியில் சுமந்து கொண்டு விருந்தாளிகளிடம் வருகிறான்! இவன் மூஞ்சியின் போக்கைப் பார்க்கையிலேயே இவன் எவ்வளவு அன்பு காட்டி நடிக்க வந்திருக்கிறானென்று தெரிந்துபோகிறது! அதற்குப்பிறகு என்னவோ சில பேச்சு, வெட்டி வார்த்தை, வீண் தொனதொனப்பு நடந்து அதுவும் சட்புட்—கட கட கட் என்று சீக்கிரம் முடிந்து போகிறது! வீடு இருக்கிற நேர்மைக்கும், நடக்கிற ஒழுங்குக்கும் வளர்க்கிற விதத்துக்கும் தக்கபடிதானே வீட்டுப்பையன்களும் பெண்களும் இருப்பார்கள்! சிறுமிகளோ புது மோஸ்தரில் வளர்ப்பு! பையன்களோ எல்லோருமே கிராப் தலையர்கள்! ஒவ்வொருவனிடமும் ஒரு கண்ணாடி, சீப்பு, வாசனைத்தைலம்—இன்னும் அலங்காரத்திகள் வேறே!

ஃ

இதுகிடக்க, விகடன் முன் விட்டதைத் தொட்டுக்கொள்ளுகிறேன்! வீட்டுக்கு வந்த மனிதர்களுக்குத் தாம்பூலமோ, தாகசாந்தியோ, சாப்பாடோ இவை முதலான உபசாரங்களெல்லாம் வெகு வெகு விநோதப் புதுதினுசில் வந்துவிட்டது! வீட்டுப் பெண்களுக்குப் பதிலாக வீட்டு வேலைக்காரிகள், வேலைக்காரர்கள் பரிமாறுகிறது! சோடா லெமினட் புட்டிகள் உடைக்கிறது! தாம்பூலத் தட்டில் சிகரெட்டுகள் வைக்கிறது! எல்லாம் மேஜைமீதே சாப்பிடுகிறது! இது நாகரீகமாய்ப் புது துரைகளும் துரைசானிகளுமாயிருக்கிறவர்களுக்கு நடக்கிற விமரிசை! விகடனைப்போல தலைகாய்ந்த பருப்புகளாயிருந்தாலோ அவர்களுக்கு ஒரு மூலையிலே ஏதோ சாதம் கொழம்பு கொட்டி, அதுதான் பணக்கார வீட்டுச் சாப்பாடென்று எண்ணிக்கொள்ளும்படி செய்து விட்டு, அதில் தங்களின் கௌரவங்களையும் காட்டிக்கொள்கிறது! இதில் இன்னொரு மோஸ்தர் என்னவென்றாலோ, தங்கட்குச் சரிசமமல்லாதவர்களுக்கு ஹோட்டலுக்குப் பணத்தைக்கொடுத்து சாப்பிட்டு வரும்படி அனுப்பிவிட்டு அதை ஒரு பெருமையாக நினைத்துக் கொள்கிறது! வீடு தேடி வந்தவனுக்கு வீட்டிலுள்ள பழங்கஞ்சியாவது இட்டுபசரிப்பதே மரியாதை யென்று நினைப்பதில்லை! கடைசியாக, வீட்டுக்கு வந்தோர் புறப்பட்டுப் போகும் போதோ கை குலுக்குவதான செக்காண்டுகள் கொடுக்கிறதும், வாய்ப்பேச்சு வந்தனங்கள் சொல்வதாய்த் தாங்க்ஸ்கள் (Thanks) செய்து கொள்ளுகிறது மான உபசரணைகளில் மாறிவிட்டது!

ஃ

காலையிலெழுந்தவுடனே கடவுளைத் தியானித்தல், ஸ்நானம், சந்தியாவந்தனம், நியம நிஷ்டை முதலானவைகளெல்லாம் எங்கோ போய் விட்டன! போனராத்திரியில் வாய்க்குள் எற்றிய இரண்டு மூன்று திராம் மதுவின் மயக்கமும், தலைநோயுக்

நீரச் சுடச் சுடக் காப்பியும் சுருட்டும் நெருப்பும் தேடுகிறதும், அப்படியே மெயில் பேப்பரோ, ஹிண்டு பேப்பரோ, நாவல்ஸ்களோ—இதுகளைக் கையேந்துகிறதும், அதுவும் தப்பினால் பந்தடிக்கப் போகலாமா, லான்டெனிஸ் விளையாடலாமா, பண்டாபீஸுக்குப்போய் கணக்குப் பார்க்கலாமா, அல்லது மார்கெட்டுக்குப் போய்க் கறிக்கடைகளைப் பார்க்கலாமா என்று வெளியே புறப்பட்டு விடுவதில் புத்தி போகிறதே தவிர கோயில் குளங்களுக்குப் போகவேண்டு மென்றாவது, அங்கு சென்று கும்பிடு போடவென்றாவது நினைப்பதேயில்லை. பிறகு சாயங்காலத்தில் ஆபீஸை விட்டு வெளிப்படும்போதே பீச்சுக்குப் போகலாமா, காஸ்மாபொலிற்றன் கிளப்புக்குப் போகலாமா, கோமள விலாஸ் ஹோட்டலுக்குப் போகலாமா, பில்லியர்ட், ஸ்பேட் முதலானவைகள் விளையாடலாமா, அமெரிக்கன் பார், லண்டன் பார், முதலானவைகளில் புகுந்து வரலாமா, அல்லது பழய சாமான்களின் ஷாப்புகளில் நுழைந்து பார்க்கலாமாவென்று நடக்கிறதுமான இந்த ஆசார உபசாரங்கள் தான் அதிகமாக மிஞ்சிப்போயிருக்கிறது! வீட்டுச் செலவுகளுக்குப் பணம் குறைவுபட்டாலும், சினிமா—டிராமா செலவுகட்கு எப்படியேனும் முதலில் சரிபார்த்துக் கொள்கிறது! லேடியும் துரையும் போலச்சென்று வருகிறது! வீட்டு ஆண்களும் பெண்களும் சீமை மோஸ்தரிலே முழுகிப் போனபிறகு குடும்பச்செட்டும் கட்டுப்பாடுகளும் தூள் தூளாய்க் காற்றுக்குப் பறக்கவேண்டியது தானே! வீட்டு ராணியோ இன்னும் எவ்வளவுக்கு மேலாக நாகரீகநடை உடுப்புகள் போட்டு ஆங்கில அசல் துரைசானியாகலாம் என்று பார்க்கிறாள்! வீட்டுத் துரை ராஜாவோ அசல் ஐரோப்பிய துரையாகப் போய்விட முயலுகிறார். இதற்கேற்றபடி மோட்டார், ஸைகிள் முதலிய வாகனாதிகள் வேறே!

ஃ

நல்ல நாள், தீயநாள், பெருநாள், திருநாள், நோன்பு விரதநாள் விசேஷங்களெல்லாம் எங்கேயோ ஓடிப் போய் விட்டன! நல்ல அமாவாசை, கிருத்திகை, ஏகாதசி நாள்களில் தான் மதுமாம்சம் புசிக்கிறது! குருக்கள், பூசாரிகள், ஆசாரிகள், வாத்திகள் இன்னும் விகடனைப் போன்றவர்கள் முதலானவர்களை யெல்லாம் இரு கையெடுத்துச் சேவிக்கிறதற்குப்பதிலாக, என் ஓய்!—என்ன ஓய்!—எப்படி பிழைப்பு உமக்கு நடக்கிறது ஓய்! அந்த ஆசாமி நீர்தானா ஓய்! நடுக் கொள்ளைக்காரன் ஓய்! எங்கே பறக்கப் பார்க்கிறாய் ஓய்! என்கிற மரியாதையான உபசாரணைகள் செய்து தூத்தி விடுகிறதாயிருக்கிறது! இன்னும் அலக்ஷியப்படுத்துவதாயுமிருக்கிறது! பெரியோர்கள் என்கிற மரியாதையே மண்ணாய்ப் போச்சுது! புருஷனைப் பெண்டாட்டிமார்கள் தெய்வமாகப் பாவித்து வணங்க வேண்டிய தெல்லாம் போய், ஜதை போட்டுக்கொண்டு உலாவி நிற்கிற காலமாய்ப் போய்விட்டது! ஐயையோ! அட தெய்வமே! புராதன ஆசார உபசாரங்களெல்லாம் எங்கே ஓடி ஒளித்துக்கொண்டதோ! ஆ! காலமே! தேசமே! என்ன நாகரீகம்—என்ன சீர் திருத்தம் இது? இவ்வளவு புது நாகரீகங்களிலே எதாவது குடும்பச்செட்டு—சிக்கனம்—ஒழுங்கு நல்ல புத்தி—அடக்க வணக்கம்—யோக்கியதை—சுசீலம்—தெய்வ பக்தி—பாவத்திற் கஞ்சுதல்—நல்வழி சன்மார்க்கம்—எதாவது இருக்கிறதா? ஏதோ கொஞ்சம் மின்மினி மாதிரி

அங்கங்கே தோற்றினாலும் அந்த நல்லதைக் கண்டடைகிறார்களா? காணோமே! இவ்வளவு கொஞ்சகாலத்திற்குள்ளேயே இவ்வளவு சீர்திருத்த உச்சிக்கு ஏறிவிட்ட கருப்புத் துரைகளும் துரைசானிகளும் இனி சீக்கிரத்திலேயே எல்லாம் வெள்ளைக்கார தேசத்து மோஸ்தரிலே முழுகிப் போவார்களோ என்று விகடன் நினைக்கவேண்டியிருக்கிறது! நடக்கிறது நடக்கட்டும், பின்னால் பார்ப்போம்! எல்லா கைவறண்டால் சரியாய்விடும்! வரண்டு வாட்சியடைவதற்கே இந்தப் புது புது வழிகள்! ராம்!ராம்! சுபம்! ஞ!! சுவாஹா!!!



## கோணல் நெஞ்சினரின் போக்கு.

எப்போதும் சிலருக்குப் பிறாது நற்குணங்களைக் கோணல் வழியாகப் பார்த்து இகழ்ந்தும் தாழ்த்தியும் குத்தியும் பேசுவதே வழக்கமாக இருக்கிறது. ஒரு புஸ்தகத்தை இரண்டு ரூபாய் கொடுத்து வாங்கினதாக ஒருவன் கூறினால், அதற்கு மற்றவன், "சும்மாதான் ரூபாய் அவிழ்த்துக் கொடுத்தாயோ, அப்புஸ்த கத்திலிருக்கிற விஷயங்களைக் கிரகித்துக் கொள்வதாகக் கொடுத்தாய் என்று தாழ்த்திப் பேசுகிறான். அவ்வித மின்றி அந்த நல்ல புஸ்தகத்தைத் தேடி எடுத்து வாங்கிய அவனது நற்குண விவேகத்திற்குக் கொண்டாடிப் பேச அவனை மகிழ்விக்கக் கூடாதா? அதற்கான நல்ல புத்தியும் நேர் வழியும் காணோமே! ஐயோ கோணல் நெஞ்சே!

அடிபட முடியாத பெரிய வந்துவிட்ட பொழுது எவரும் அடிப்பார் இல்லாததால், ஈக்கள் மேலே வந்துகடிக்க, அதனால் கோபித்து அதை அடிக்கப்பேமல் அந்த அடி தன்மீதேவிழுகிறது. இது அடிப்பாரில்லாததால் தானே அடித்துக்கொள்வது போலாம். அப்பால் தான் விரும்பாமலே கிராமிகள் வந்து தன்னை அடித்து உபத்திரவப் படுத்துகின்றன. அதற்குப் பிறகு கசப்பான மருந்துகளாகிய உபாத்தியாயர் வந்து துன்புறுத்துகிறார். அவர் நல்லது செய்யினும், அதுவும் கசப்பும் சங்கடமும் வாத்தியுமாகவே இருப்பதால் மனம் வெறுக்கிறது.

---

பெண்கள் கற்கவேண்டியது முக்கியமாகக் குடும்ப கல்வி. அதற்குப் பிறகே மற்ற கல்விகலங்கள். சும்மா சும்மா வெள்ளைத் துண்டைக் கையில் வைத்துக்கொள்வதாலேயே மேன்மை பிறந்திடாது. நன்கு கற்றதற்கு முக்கிய அடையாளம் அடக்கமான குணமே. விரிவாகிய உலகினில் தாங்கள் கற்றது அல்பமே என்று அறிகிற தெளிவுதான் நன்கு பயின்றதற்கு முதற் குறியாகும்.




போன தீபாவளியிலே அடகுக் குப்போன நகைகளிற் சில இன்னும் இந்த தீபாவளியிற்கூட வீட்டுக்குத் திரும்பி வரவில்லையாம்!

ஃ

இன்னொரு குடும்ப பாரத்தைச் சுமந்து, இருந்தயாவும் செலவிட்டுத் தரித்திரம் பிடித்து இப்போது தான் ஓய்ந்திருக்கையில், வேறொரு குடும்ப பாரமும் மெதுவாய்த் தலையிலேற நெருங்கி வருகிறதாம்!

ஃ

சிலருக்குப் படிப்பு இருக்கிறது, கவித்வம் செய்ய சக்தியுமிருக்கிறது. ஆனால், தானே யோசித்தெழுதப் புத்தி தடமாட்டமாய் இருக்கிறதாம்!

ஃ

ஒரு பத்திராசிரியர் தம்முடைய பத்திரிகையை வேறொருவரிடம் கண்டால், அதை அந்த வேறொருவருடைய பத்திரிகையே என்று எண்ண வேண்டுமாம்!

ஃ

வாடகை வீட்டில் பாடுபட்டு மரம் செடி நட்டவர்களும், ஊராரை யெல்லாம் ஊட்டிப் பரிபாலித்தவர்களும் கடைசியில் தாங்கள் செய்ததைத் திரும்பப் பெறார்களாம்!

ஃ

வேதாந்தியின் குடி அவனாற் கெடுவதுடன் போகாமல், கடவுளுங் கூடச் சேர்ந்து கொண்டு கெடுக்கிறாராம்!

ஃ

இன்னும் வைக்கட்டுமா என்று கேட்காமலே வலியக் கூட இரண்டு இட்டிலியும் நாலுகரண்டி சாம்பாரும் பரிமாறிவிட வேண்டுமாம்! அப்படி வைத்ததற்காகப் புசிப்பவர் கொள்கிற கோபம் உண்மையான கோபமல்லவாம்! உள்ளுக்குத் திருப்தி தானாம்!

ஃ

சாமி சாமி யென்று சொல்லி—நாலுபேரைக் கூட்டிக்கொண்டு—முருகர் தர்மம் செய்வோமென்று—மூலைமுடுக்குச் சுற்றி சுற்றி—பிச்சையெடுத்த அரிசி யெல்லாம்—விற்று பணம் சேர்த்துக்கொண்டு-அந்தி நேரமானதும்—கள் குடிக்கும் சாமி சாமி வாழியே!

ஃ

பிறரது வீடுகளிலேயே புசித்துக் காலங்கழிப்பவர்கட்கு அங்குள்ள அடுப்பிலே புகை எழும்பாமற் போனால் பெரிய கவலையாகுமாம்!

ஃ

தன் மனதிலுள்ளதை மனைவியிடம் சொல்ல முடியாமல் மறைக்கும் புருஷர்கள் எத்தனை பேரென்று விகடன் கணக்கு போடுகிறானாம்!

ஃ

புருஷனுக்கு உட்படாது மீறி எதிர்க்கும் பெரிய வீட்டுப்பெண்களை நகை நட்டுகளில்லாத வெறுந்தாலியோடுள்ள கழுத்தால் அறியலாமாம்!

ஃ

எவ்வளவுக்குக் கைவறண்டிருந்தாலும் தீபாவளியில் சாராயமாவது பிராந்தி புட்டியாவது அவசியம் வாங்கி உள்ளே தள்ளவேண்டுமென்று மதுரை வீரன் கூறுகிறார்.

ஃ

ஒரு தீபாவளிக்கு உயர்ந்த சேலை எடுத்துக்கொடுத்தும் விசுவாசமற்றுக் கலகமாக்கிய மனைவிக்கு மறு தீபாவளியில் மூனு ரூபாய்த் துணிதான் வாங்கித் தருவானாம்!

ஃ

மோசக்காரன் கையில் எவ்வளவு புதுப்பணம் வரினும் கடைசியில் அடியோடு முழு மொட்டைதானாம்!

# தீபாவளி நாள்.



தீபாவளி நாள் புண்யநாள். திவ்யமான நாள். என்று வருமோ என்று எதிர்பார்த்த நாள். உத்ஸாகமான நாள். பெரும் பண்டிகை நாள். நல்ல திருநாள். அதிகாலையில் தைல ஸ்நானமும், புதிய உடை பூணுதலும், தெய்வாராதனையும், பந்து மித்திரர்களுடன் பந்தி வரிசையாய் உட்கார்ந்து பல பல பக்ஷண பலகாரவர்க்கங்களுடன் உண்ணுதலுமாய் ஆநந்தித்திடும் நாள். ஒரு வருஷத்துப் பண்டிகைகளில் தீபாவளியே சிறந்த பெருநாள். அன்று முற்றிலும் அனுபவிக்கும் இன்பம் ஒரு தனித்த மகத்துவ முடையதாகும். வருஷ முழுதுக்கும் வேண்டிய ஆடையணிகளைத் தீபாவளியிலேயே வாங்கி விடுகிறோம். தீபாவளிச் செலவு ஒரு கனத்த பெருஞ் செலவேயாகும். எத்தனை அதிகச் செலவு நேர்ந்த காலத்தும் அதிலும் சில ரூபாய்களை மிச்சப்படுத்தினால், அந்த சில ரூபாய்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த ரூபாய்களுக்குச் சமமாகும். தீபாவளியின்போது நமது நாட்டில் செய்த நல்ல கதர் துணிகளையே வாங்கித்தரித்து நம்மவர்களின் ஜீவனோபாயத்திற்கு வழி செய்யக் கடவோம். நகைகளை யடகு வைத்துப்பணம் பெற்றுத் தீபாவளி செலவுகளைச் செய்வதிலும், அடகு வைக்காமலே சிறு செலவில் தீபாவளியை நடத்தும்படி பார்ப்பது தான் உத்தமம். எதிலும் சிறிது சிறிது சிக்கனம் பிடித்தால், அதிலிருந்தும் சில ரூபாய்களேனும் மிச்சமாகும். பெரிய கடன் வாங்குவதிலும் சிறு தொகை குறையும்.

ஃ

குழந்தைகளுக்குப் பட்டாசுக் கட்டுகளும், மத்தாப்பு வாணங்களும் வாங்கித்தராமல் தீராது. அவர்களைத் திருப்திபடுத்தாவிடில் வீட்டிற்கு அழகு ஏற்படாதுதான். குழந்தைகளின் சிரிப்பும், விளையாட்டும், அவர்கள் பட்டாசு சுடுதலும் அது மகா இன்பமான கண் காட்சியேயாகும். அவர்களால்தான் தீபாவளியின் சந்தோஷம் பதின்மடங்கு பெருகுவதாகும். ஆயினும், இந்த நெருப்பு விளையாட்டு நெஞ்சில் பயத்துடனும் இருக்கவேண்டி நேர்வதால் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளின் அருகிலிருந்து ஜாக்கிரதையாகக் கவனித்து வரவேண்டும். இது ஒரு பெரிய விஷயம்.

ஃ

இனி மற்றொரு சங்கதி. இதுவரையில் நாம் லௌகிகத்தில் சம்பந்தப்பட்ட வகையில் நடந்துகொண்ட நன்றித் துரோகங்கள், மோசங்கள், நயவஞ்சனைகள், உள்ளொன்று புறம் ஒன்றாக இருந்து அதை ஒரு சமர்த்தாக எண்ணியிருந்த அவிவேகம், கடவுளை மறந்து பாவ வழியிற் செய்த காரியங்கள், விஷமத்தனமான சுயநல சிந்தைகள், காமம் களவு முதலிய பாவங்கள்—இவைகளை வெளியில் பிறர் அறியாவிடினும் நமது நெஞ்சுக்குத் தெரிந்த சங்கதிகளேயாகும். அவற்றை இந்தத் தீபாவளித் திருநாளில் இன்றோடு விட்டு விட்டதாய்க்

கடவுள் அறிய சபதம் செய்து கொண்டு, நமது வாழ்க்கையைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளக்கடவோம். பிறரது குடும்பத்தைக் கெடுக்கும் சிந்தை நமக்கு இருந்திருப்பின் அதைத் தீபாவளி முதல் விட்டு விட்டுத் தூயராகக்கடவோம். இந்தத் தீபாவளி முதற்கொண்டுநாம் பிறர்க்கு இரங்கும் சுபாவ முன்னோராகி, சத்தியவந்தர்களாய், தர்ம மார்க்கதரிஸிகளாய், பகவத் பக்தியுடன் கூடியவர்களாய் விளங்கக்கடவோம். கடவுளை நம்பியவர்களுக்கு எந்தக் காலத்திலும் நன்மையே உண்டாகும். அவ்விதம் நம்பியவர்கள் அது உண்மையே என்றும் கூறுகின்றனர். தீபாவளி நாள் வாழ்க. தீபாவளி மங்களம்.








“சரியாக நான்கு மணிக்கு என்வீட்டிற்கு அவசியம் வாருங்கள்” என்று ஒருவர் தனது நண்பருக்குக் கடிதம் அனுப்புகிறார். அதைக் கண்ட நண்பர், என்ன சங்கதியோ, ஏதோ, அல்லது விசேஷ போஜனமோ என்று எண்ணியபடி தனது வேலைகளையெல்லாம் அந்த நான்கு மணிக்குள் முடித்துக்கொண்டு தயாராகி அன்பரின் வீட்டுக்குச் செல்லுகிறார். அவரைக் கண்ட அன்பரோ எந்தக் காரியமும் இல்லாமல் வெட்டிப்பேச்சுகளை ஆரம்பிக்கிறார். இதைக் கண்ட நண்பருக்கு இதற்காகத்தானா மணிகூடக் குறிப்பிட்டு வரும்படி எழுதியது என்று வெறுப்பு உண்டாகிறது. அதற்கு அந்த அன்பர் “பொழுது போகவில்லை, அதற்காக வருமாறு வரைந்தேன்” என்கிறார். அதன் பின் என்னென்னவோ பேச்சுகளைத் தொடங்குகிறார். முதலிலேயே அருவருப்பு ஏற்பட்டுவிட்டதில் எந்த சம்பாஷணையும் ருசிப்பதில்லை. சரி, புறப்பட்டு வந்ததற்கு ஏதாவது பேசுவோமென்றால், வீட்டில் உட்கார்ந்துள்ள சோம்பேறி அன்பரோ அந்த வார்த்தைக்குச் செவிகொடாமல் மன்னாதி மன்னராய் எங்கோ இன்னொருவரின் வார்த்தையிலோ, தெருவில் ஒரு காட்சியிலோ கவனம் வைப்பவராகி விட, இவருக்கு மறுபடி மறுபடி முன் சொன்னதையே திருப்பிச் சொல்லிச் சிரமப்பட நேர்கிறது. இந்த லக்ஷணத்தில் வீட்டிலேயே உட்கார்ந்துள்ள அந்த அன்பர் காபி வேண்டுமா. “வாங்கி வரட்டுமா” என்கிறார், “வாங்கி, வா” யாருக்குத்தான் தெரியாது? ஏதோ வீட்டுக்குள்ளிருந்து காபி வந்தால் அந்தக் கௌரவம் வேறே மேலும், வாங்கி வரப்போவதற்கு முன்பே, “வாங்கி வரட்டுமா?” என்ற கேள்விகள் கேட்டுக்கொண்டே வாய் உபசாரத்துடன் நின்று விடுகிற சங்கதிக்கு என்ன பதில் சொல்வது? “வாங்கி வரட்டுமா?” என்று கேட்காமலே வரவழைத்துக் கொடுத்தால் அது எவ்வளவோ ஸிலாக்கியமாயிருக்

கும். ஆனால், அது தன் கை கடிக்கிற சங்கதி யாதலின், வாய்ப் பேச்சி லேயே உபசாரம் பேசி விடுவது மேலென்று இந்த வீட்டிலேயே உட் கார்ந்துள்ள அன்பர் எண்ணி விடு கிறார். இவ்விதம் செய்து அதை ஒரு சாமர்த்தியமாகவும், அதில் ஒரு புதுப் பெருமை புகுந்து கொண்ட தாகவும் நினைத்துக்கொண்டு விடுகிற இந்த அன்பருடன் அதிக வார்த்தை பேச மனமின்றி, ஓடிவந்த அந்த நண்பர் சீக்கிரமே விடை பெற்றுத் தம் வீட்டிற்குப் புறப்படுகிறார். சிலர் உழைத்தபடியே யிருந்து ஒரு தினப் பொழுதை முடிப்பர். வேறு சிலர் ஒரு தினத்தை எந்தெந்த வெட்டிப் பேச்சுகளில் கழித்துத் தொலைப்பது என்று யோசிப்பர். லௌகிக விசா ரத்துடன் உழைத்துக் கொண்டிருப் பவனை சுகவாசியாகிய ஒருவர் எந்தக் காரியமுமின்றி வெட்டிப் பேச்சுக்கு அழைத்தால் அதில் திருப்தி ஏற் படுவதில்லை. ஒரு முக்கிய காரிய மிருந்து நடுராத்திரியில் அழைத்தா லும் உதவிக்கு ஓடிவரத் தயார்தான். எந்த அவசரமும் விசேஷமுமின்றி அழைத்துவிட்டு, பிறகு வீண் வார்த்தைகளைத் தொடங்கினால் மன திற்குக் கசப்பு ஏற்பட்டு விடுகிறது.

ஃ

ஒவ்வொருவர் வீட்டிலும் ஒவ் வொரு முக்கியஸ்தர்கள் இருக்கி றார்கள். அவரைத் தேடியே அவ் வீட்டுக்குப் பலர் வருகிறார்கள். வந்த வரிடம் முகம் கொடுத்துப் பேசுகிற வரும் அந்த ஒருவரேதான். மற்ற வர்களோ அந்த ஒருவருக்காகவென்று வலியப் பேசவருகிற உபசாரக்காரர் களாவர். அந்த முக்கியமான ஒருவர் அவ்வீட்டிவில்லாவிடின், அவரைத் தேடிவந்தவர் அப்பொழுதே புறப் பட்டு விடுகிறார். அல்லது அந்த முக்கியஸ்தர் கண்மூடி விடின், பிறகு அவ்வீட்டை எட்டியே பார்ப்பதற் கில்லை. இந்த நிலையில் அவ்வீட்டி லுள்ள உபசாரக்காரர்களின் உறவும் அந்த ஒருவர் மறைந்ததோடும் தீர்ந்து விடுகிறது. இப்போது அந்த உப சாரக்காரர்களின் தயவை விரும்பு வாருமில்லை; அவர்களை லட்சியம் செய்வாருமில்லை; அவர்களின் கோபத் துக்கு அஞ்சுவாருமில்லை; எல்லாம் அந்த ஒருவருடன் தீர்ந்துபோன சங் கதியாகி விடுகிறது.

ஃ

ஒரே சாமானை ஒரு கடையில் கேட்கும்பொழுது அவன் ஒரு ரூபாய் என்கிறான். அவன் மிக்க நியாயமாய் யதார்த்தமான விலையையே சொல்வ தாகவும் தோன்றுகிறான். யோக்கிய மான மனிதனாகவும், தெய்வ பக்தி யுள்ளவனாகவும் காணப்படுகிறான். ஆனால், நமக்கோ அதே சாமானை முன்பு பதின்மூன்று அணாவுக்கு வாங்கிய ஞாபகம் வருகிறது. அதன் விலை 13—அணா தான் என்கிறோம். கடைக்காரனோ கண்டிதமாக 15—அணாவுக்குக் குறைந்து வரா தென்று விடுகிறான். பிறகு நாம் பெரிய கடைக்குச்சென்று கேட்கை யில் 13—அணாவுக்கே கிடைப்பதா யிருக்கிறது. அதை 12—அணாவுக்கு நாம் கேட்டு வாங்கிக்கொள்கிறோம். முதலில் ஒரு ரூபாய், பிறகு 15-அணா வாக விலை, பிறகு13-அணா, கடைசி யில் 12-அணாவாக விலை முடிகிறது. இது இந்திய வியாபாரத்தின் போக் கானாலும் பொதுவாக வியாபார சங் கதியே இப்படித்தான் இருக்கிறது. சற்று விட்டு ஏமாறினால் நஷ்டந்தான்.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்.

———




**நான் கண்ட நாற்பறவைகள் :—**

[ஆரியூர் ஸ்ரீமான் ஆ. வ. பதும நாப பிள்ளை அவர்கள் இயற்றியது.]

அகவல் ரூபமாய் எளிய நடையில் கவிதை செய்யப்பெற்றுள்ளது. 11-பக்கங்கள் கொண்டது. வானம்பாடி, குயில், மயில், கிளி இவற்றுடன் பேசுவது போன்றும், அவ்வழியில் பல தத்துவங்களைக் கண்டறிவது போன்றும் கற்பனை செய்யப்பெற்றுள்ளது. ஸ்ரீமான் பிள்ளையவர்களது பாக்கள் எப்பொழுதுமே இன்பச்சுவை கொண்டவை. அவர் இயற்கையிலேயே ஒரு கவி. இந்நூலுக்கு நாம் மிகவும் மதிப்பு வைக்கின்றோம்.

**விசித்திர தேவலோகக் கோர்ட்டுக் கேஸுகள் :—**

[ஸ்ரீமான் P. சுப்பராமய்யா அவர்கள் இயற்றியது. திருவள்ளூர் அகில இந்தியா லா ஜர்னல் ஆபீஸில் அச்சிட்டது.] விலை அணா 8.

இதனுள் ஏரகத்துச் செட்டியார் கேஸ், நந்தியின் மான நஷ்டக் கேஸ், கிருஷ்ண பரமாத்மா ஜாமீன் கேஸ்—இம்மூன்றும் அடங்கியுள்ளன. திறமையான வக்கீல் வாதமும், ஜட்ஜியின் தீர்ப்பும் மிக்க ஸ்வாரஸ்யமாயுள்ளன. பக்திச்சுவை ததும்பி நிற்கின்றது. வியவகாரதோரணை ஹாஸ்யமாயும், மனங்கவரும் மாண்புடையதாயு முள்ளது; ஒவ்வொருவரும் பெற்று வாசித்து இன்புறத்தக்கது. இதன் இரண்டாம் பதிப்பே இதன் உயர்வை விளக்கும். இது முதல் பாகம். மற்ற பாகங்களும் விரைவினில் வெளிவருமாக.

**ஸ்ரீ ஆண்டாள் வைபவம் :—**

[இந்நூலை ஆக்கியோனின் பெயர் தெரியவில்லை. ஆசிரியரின் பெயரில்லாத நூல் ஒரு நூலாகாது. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீகான வித்யா பிரஸில் அச்சிட்டது. விலை அணா 3.

ஸ்ரீ ஆண்டாள் வைபவம் மிகு திவ்யமாயும், விரிவாகவும், பக்திரஸம் ததும்பும் முறையிலும் நன்கு வரையப்பட்டுள்ளது. இவ்வளவு விசாலமாக வாசித்தறிந்தால் தான் மனதிற்குத் தெளிவு தரும். இந்நூல் அநேக பதிப்புகள் வெளியாவதற்கேற்ற பெருமையை யுடையது.

**ஆல்கபோன் :—**

அமெரிக்கா தேசத்துக் கொள்ளைக்கார ரொருவரின் சரித்திரம். பல ஆப்டோன் படங்களுடையது. ஆனல், தெளிவாக இல்லை. தென்பாதி ஸ்ரீமான் T. S. கனக சபை அவர்கள் மொழிபெயர்த்தது.

விலை அணா 8.

இது ஒரு சரித்திரமாக மட்டும் உள்ளது. கதையாக வாசிப்பதற்கான சுவை இதிலில்லை. கதைக்கு வேண்டிய சங்கதிகளான 'சத்து' மட்டும் உள்ளது. அதைப் பெருக்கி விசாலமான முறையில் ஒரு கதையாக அமைப்பின் வாசகர்கட்கு ருசிக்கும். படித்தறிந்த புத்திசாலிகள் செய்யும் தீமைகளை இது ஒருவாறு விளக்கும்.

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ ஹூ த்திய ஐப்பசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங். | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [சூன்யர்க்கம் துலாகாவேரி ஸ்நானமாரம்பம். |
| பி-ஸி | 16 | 1 | ஞா | துவி-43-40, பர-55-5, துலாரவி 18-29 விஷுவத் |
| ம | 17 | 2 | திங் | திரி-50-2, கிரு-60-0, கிருத்திகா—சந்திரோதய கௌரீ-விரதம். |
| ஸி-அ | 18 | 3 | செவ் | சது-56-10, கிரு-2-34. |
| ஸி | 19 | 4 | புதன் | பஞ்-60-0, ரோ-9-52, திருதினஸ்பிருக். |
| ம | 20 | 5 | வியா | பஞ்-1-53, மிரு-16-38 |
| ஸி | 21 | 6 | வெள் | ஷஷ்-6-43, ஆரு-22-31, கரிநாள். |
| ஸி | 22 | 7 | சனி | ஸப்-10-16, புந-27-2, |
| ஸி | 23 | 8 | ஞா | அஷ்-12-13, பூச-29-58, விருச்சிகாயனம் 35-40. |
| ஸி-ம | 24 | 9 | திங் | நவ-12-18, ஆயி-31-0. |
| ஸி | 25 | 10 | செவ் | தச-10-24, மக-30-5, |
| அ | 26 | 11 | புதன் | ஏகா-6-33, பூர-27-16, ஸர்வைகாதசி. |
| ம-ஸி | 27 | 12 | வியா | துவா-0-54, உப-52-41, உத்-22-45, பிரதோஷம் (ராத்திரி) நாகசதுர்த்தசி ஸ்நானம் அவமா. |
| அ-ஸி | 28 | 13 | வெள் | சஸி-45-0,ஹஸ்-16-50,தீபாவளிபண்டிகை சிவராத்ரி |
| ம-அ | 29 | 14 | சனி | ●-35-44, சித்-9-53, கேதார கௌரீவிரதம். |
| ஸி<br>உ-ம | 30 | 15 | ஞா | பிர-26-14, ஸ்வா-2-22, உப-52-21, கார்த்திகசுத்தம், விக்ரமசகமாரம்பம். [கௌரி பூஜா. |
| ஸி | 31 | 16 | திங் | துவி-16-50, அநு-47-32, திதிதுவயம், திரிலோசன |
| உ-அ | 1 | 17 | செவ் | திரி-7-57,கேட்-41-13,நாகசதுர்த்தி, ரஜ்ஜ ்மீ 2உ |
| ம-அ | 2 | 18 | புதன் | சது-0-1, உப-53-40, மூல-36-11, அவமா. |
| ஸி | 3 | 19 | வியா | ஷஷ்-49-4, பூரா-32-42, சூரஸம்ஹாரம். |
| ஸி-ம | 4 | 20 | வெள் | ஸப்-46-17, உரா-31-5, கரிநாள். |
| ஸி | 5 | 21 | சனி | அஷ்-45-32, ஶ்ரவ-31-25, கோபாஷ்டமி |
| ம-ஸி | 6 | 22 | ஞா | நவ-46-40, அவி-33-33, கிருதயுகாதி. |
| ஸி | 7 | 23 | திங் | தச-49-24, சத-37-25. |
| ம-அ | 8 | 24 | செவ் | ஏகா-53-30, பூட்-42-35, ஸர்வ உத்தான ஏகாதசி, |
| ஸி-உ | 9 | 25 | புதன் | துவா-58-39, உட்-48-46, துளசீ விவாஹம். |
| ஸி-அ | 10 | 26 | வியா | திர-60-0, ரே-55-38, பிரதோஷம், திருதினஸ்பிருக், மாயூரம் ரதம். |
| அ | 11 | 27 | வெள் | திர-4-29, அசு-60-0, வைகுண்ட சதுர்தசி. |
| ஸி | 12 | 28 | சனி | சஸி-10-39, அசு-2-55, கபில-தாத்ரீ-பூஜா. |
| பி-ஸி | 13 | 29 | ஞா | ○-16-56,பர-10-19, கிருத்திகை அன்னாபிஷேகம் |
| ம-அ | 14 | 30 | திங் | பிர-23-10, கிரு-17-40, கார்த்திகபருளம், மாயூரம் கடைமுழுக்குத்ஸவம், துலா காவேரி ஸ்நானமுடிவு. |

(இங். column: அக்டோபர் (5-16) ; நவம்பர்)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ரா | 15உக்கு ராசி | | |
| சனி | | | குஜகு கேது |
| | புத | ரவி | சுக் |

# நமது சந்தா நேயர்களுக்கு
## ஒரு வேண்டுகோள்.

செந்தமிழ்ச் செல்வர்காள்,

இனும்! இனும்!! இனும்!!!

1. ஒரு புதிய சந்தாதாரரைச் சேர்த்து விலாசத்துடன் சந்தாத் தொகையை யனுப்புவோருக்கு, புதியதாக இயற்றிய "கணவனின் கடமை" அல்லது பெண்களின் நிலைமை என்னும் நாவலை இனுமாக அனுப்பப்படும். இதன் விலை அணு 4.

2. மூன்று புதிய சந்தாதாரரை சேர்த்து விலாசத்துடன் சந்தா துகையை அனுப்புவோருக்கு எமது பத்திராசிரியரால் இயற்றிய "பதினெட்டாம் பாஷை" அல்லது அபூர்வ தமிழ் பரிபாஷை என்னும் புத்தகம் இனும். இப்புத்தகம் இதுகாறும் வெளிவராத தமிழ் நூதனம். அபூர்வ ரகசிய பரிபாஷை. பேசினுல் ஒருவரும் பக்கத்திலிருந்து அறிந்துகொள்ள முடியாது.

இதன் விலை அணு. 8.

3. ஐந்து புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து விலாசத்துடன் சந்தா தொகையை யனுப்புவோருக்கு அநேக மாதங்களாக எதிர்ப்பார்க்கப்பட்டுத் தற்சமயம் வெளி வந்துள்ளதான "மாணிக்கவல்லி" அல்லது ஓர் மாதின் மர்மம் என்னும் நாவலை இனுமாக யனுப்பப்படும். இதன் விலை ரு 1.

4. ஏழு புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து விலாசத்துடன் சந்தா தொகை பூராவும் அனுப்புவோருக்கு ஸ்ரீமான் மாதவராய முதலியாரால இயற்றப்பட்ட "அங்கயர் கண்ணி" அல்லது அன்புள்ள மங்கை என்னும் ஓர் நிகறற்ற நாவல் புத்தகம் இனுமாக அனுப்பப்படும். இதன் விலை ரூபா. 1—12—0

5. ஒன்பது புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து விலாசத்துடன் சந்தாவையும் முன்னதாக யனுப்புவோர்க்கு 60-நாளில் தமிழ் மொழியால் தானே சுலபமாக இங்கிலீஷ் கற்றுக், கொள்ளக்கூடிய 800-பக்கங்களுக்கு மேல் கொண்ட அழகிய காலிகோ பயிண்டுடன் கூடிய "ஆங்கில ஆசான்" அல்லது ஆங்கில போதினி என்னும் புத்தகம் இனுமாக யனுப்பப்படும். இதன் விலை ரு. 2.

தங்களின் பூரிப்பினால் இப்புதிய வருஷத்தில் நமது "அமிர்த குணபோதினி" விசேஷித்த அபிவிர்த்தியைப் பெற்றிருக்கின்றது. நமது செந்தமிழ் நாட்டில் "அமிர்த குணபோதினி"க்கு நிகராக மற்றெந்தப் பத்திரிகையுமில்லை யென்று உலகோர் பலர் அறிந்த விஷயமே. 'அமிர்த குணபோதினி'யின் சிலாக்கியங்களை நன்குணர்ந்த அன்பர்கள் தங்களால் இயன்றவரை பிராயசை எடுத்துக்கொண்டு தங்களைச்சேர்ந்த பந்து மித்திரர்களுக்கும், மற்றவர்களுக்கும் இப்பத்திரிகையின் உயர்நலங்களை விவரித்துச் சொல்லி, அன்னவர்களையும் அமிர்த குணபோதினிக்குச் சந்தா நேயர்களாய்ச் சேர்ப்பித்து, இப்பத்திரிகையை மேன்மேலும் அபிவிர்த்தி செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். அவ்விதம் முன்வந்து உதவும் குணசீலர்களான அன்பர்கட்கு மேற்கண்ட பரிசுகளை வழங்கவும் சித்தமாயிருக்கின்றோம்.

ஸ்ரீ தி. இராஜகோபால் முதலியார் என்பவர் தமது பெயரால் நடத்திய வி. பி. கம்பெனியை அவருக்கு நேர்ந்த பலவித கடன் தொந்தரவுகளினால் 29-6-32-ல் சகல பாத்தியத்துடன் அன்னவரது பெயரையும், ஆங்கில ஆசான் மற்றும் நாவல் தினுசுகளடங்கிய புத்தக காபிரைட்ஸ்களையும், அமிர்த குணபோதினி ஆபீசும், பிரின்டிங் பிரஸ் முதலியவைகளையும் ஸ்ரீமான் இ. மா. கோபால கிருஷ்ணக் கோன் அவர்களுக்கு விற்பனை செய்து விட்டார். இது விஷயமாக நமது பத்திரிகையில் கடந்த மூன்று மாதங்களாக விவரித்துள்ளோம். நேயர்கள் அறிந்த விஷயமேயாகும். தாங்கள் எம்மிடத்து இன்னும் தங்களின் உயரிய நட்பினையும் அன்பையும் செலுத்தி, தங்களுக்கு வேண்டிய புத்தகம், சாமான்களுக்கும் எமக்கே ஆர்டர் கொடுத்து எம்மை உற்சாகபடுத்துவீர்களெனக் கோருகிறோம். தங்களுடைய பந்துமித்திரர்களுக்கும் இந்த மாதப் பத்திரிகையைக் காண்பித்து அன்னவர்களையும் எமது கம்பெனிக்கு ஆர்டர் கொடுக்கவும், சந்தாதாரராய்ச் சேரவும் சிபார்சு செய்யக் கோருகிறோம்.

தங்களின் சிரேஷ்டமான அன்பையும், தாங்கள் "அமிர்த குணபோதினி"க்குச் செய்யும் புது உதவியையும் ஆவலுடன் எதிர்ப் பார்க்கின்றனம்.

மானேஜர்,

அமிர்த குணபோதினி ஆபீஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை.